# காளிதாசன் காவியங்கள்

ருது சம்ஹாரம்
மேக தூதம்

பேராசிரியர் மதியழகன்

தியாகராயா பிரசுரம்

# காளிதாசன் காவியங்கள்

## பருவ காலங்கள்

## மேகத் தூது

தமிழாக்கம் :

பேராசிரியர் அ. மதியழகன்
B.E., M.Sc (Engg.)., Ph.D



தியாகராயா பிரசுரம்

18. வ. உ. சி தெரு,

தியாகராய நகர்,

சென்னை-600 017.

## நூல் விவரம்


நூல் பெயர் : காளிதாசன் காவியங்கள்
பதிப்பு ஆண்டு : முதற் பதிப்பு, 1994
ஆசிரியர் : அ. மதியழகன்
ஆசிரியர் பிறந்த ஆண்டு : 1939
மொழி : தமிழ்
வடிவம் : கவிதை
பொருள் : வடமொழி இலக்கியம்
நூலின் அளவு : கிரவுன் 1X8
© உரிமை : தியாகராயா பிரசுரம்
தயாரிப்பு : ராசா
தாளின் தன்மை : 10.7 Kg வெள்ளைத்தாள்
அச்சு எழுத்து அளவு : 12 புள்ளி
பைண்டிங் : கார்டு போர்டு
மொத்த பக்கங்கள் : 88

---

நூலின் விலை : ரூ. 13-75

ரூபாய் பதின்மூன்றும்,
காசுகள் எழுபத்தைந்தும்.

---

அச்சிட்டோர்:

தியாகராயா பிரிண்டர்ஸ்,
18, வ. உ. சி தெரு,
தியாகராய நகர், சென்னை-600 017.

# பதிப்புரை

வடமொழி இலக்கியங்களான இராமாயணம், மகாபாரதம், சாகுந்தலம் இவற்றைத் தமிழ்மக்கள் கதைகளாகக் கேட்டும், திரைப்படங்களாகப் பார்த்தும், தமிழ் உரைநடை நூல்களாகப் படித்தும் சுவைத்திருக்கிறார்கள். தமிழில் கவிதை நூல்களாகக் கம்ப இராமாயணமும் வில்லி பாரதமும் வெளிவந்திருக்கின்றன. மற்ற வடமொழிக் கவிதை இலக்கியங்களை வடமொழி அறிந்த மிகச் சிலரே படித்திருக்கிறார்கள். இன்னும் சிலர் அவற்றின் ஆங்கில மொழியாக்கம் படித்திருக்கலாம். தமிழ் மக்கள் பலரும் படித்துச் சுவைப்பதற்காக எங்கள் முதல் முயற்சியாக 'வித்யாபதியின் கவிதைக் காவியம்' என்னும் நூலை வெளியிட்டபின் இப்போது 'காளிதாசன் காவியங்கள்' என்னும் இத்தமிழாக்க நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

—பதிப்பகத்தார்

## விற்பனையாகின்றன !

| | |
|---|---|
| வித்யாபதியின் கவிதைக் காவியம்<br>(கண்ணன் ராதையின் காதலை விளக்குவது)<br>[மொழி பெயர்ப்பு]<br>—பேராசிரியர் மதியழகன் | 15-00 |
| குழந்தைப் பாடல்கள்<br>—ராசா | 10-00 |
| சுட்டிக் குழந்தைகளுக்குக் குட்டிக் கதைகள்<br>—ராசா | 18-00 |
| நிலவே நிலவே... (கிராமிய நாவல்)<br>—ராசா | 18-75 |
| மாஜிக் செய்வது எப்படி?<br>(படங்களுடன்)<br>— நிபுணர் சத்யானந்தன் | 12-50 |
| விஞ்ஞானப் பார்வையில் விந்தையான மண்டலங்கள்<br>—கதிரவன் | 11-00 |
| அன்றாட வாழ்வில் அறிவியல்<br>— கதிரவன் | 18-00 |

# முன்னுரை

வடமொழி இலக்கியங்களில் காளிதாசர் இயற்றிய இரகுவம்சம், குமாரசம்பவம், விக்ரமோர்வசியம், மாளவிகாக்னிமித்ரம், சாகுந்தலம், ருது சம்ஹாரம், மேக தூதம் என்னும் நூல்கள் குறிப்பிடத் தக்கவை. முதல் இரண்டும் கவிதைப் பெருங்காவியங்கள். அடுத்த மூன்றும், கவிதை நாடகக் காவியங்கள். மற்ற இரண்டும் கவிதைக் குறுங்காவியங்கள்.

ருது சம்ஹாரம் என்னும் நூலில் ஆறு பருவகாலங் களின் இயற்கையும், மக்கள் வாழ்க்கை முறைகளும் சொல்லப் படுகின்றன. மேக தூதம் என்னும் நூல் தொலைவில் தன்னைப் பிரிந்து வாழும் மனைவிக்கு மேகத்தைத் தூது அனுப்பும் கணவனின் வாய்மொழியாக அமைந்திருக்கிறது. இந்நூலிலும் மேகம் செல்லும் வழியில் மலைகளும், நதிகளும், மற்ற இயற்கைக் காட்சிகளும் விரித்துரைக்கப்படுகின்றன. மேலும் இவ்விரு நூலிலும், வடமொழி இலக்கியங்களில் பெரிதும் காணப்படும் காதல் உணர்வுகளும், உறவுகளும் விரவிக் கிடக்கின்றன.

மூல நூலின் சுவையை மொழிபெயர்ப்பில் முழுமையாகத் தருவது எளிதல்ல. சொல்லுக்குச் சொல் மொழி பெயர்த்தல் (Transliteration) இலக்கியத்திற்குச் சரியாகாது. சொல்லப் படும் பொருளினை மொழிமாற்றம் (Translation) செய்யும் போது மூலமொழியின் சொற்சுவையும் இல்லாமல் மாற்று மொழியின் சொற்சுவையும் இல்லாமல் போகலாம். மூலமொழியின் சொற்சுவையை அப்படியே தர இயலா விடினும் மாற்று மொழியிலேனும் பொருள் மாறாமல் சொற்சுவை ஊட்டி மொழியாக்கம் (Transcreation)

செய்தால் நன்றாயிருக்கும். திரைப்படங்களை ஒரு மொழியி லிருந்து இன்னொரு மொழிக்கு மாற்றம் (Dubbing) செய்வ தற்கும், மறு ஆக்கம் (Re-make) செய்வதற்கும் உள்ள வேறுபாடு மொழி பெயர்ப்புக்கும் [Translation] மொழி ஆக்கத்திற்கும் (Transcreation) உள்ளதெனலாம். ஆனால் மொழியாக்கம் முறையாகச் செய்யவில்லை எனில் மொழித் தழுவலாக (Adaptation) முடிந்துவிடும். மொழியாக்கத்திற்கு நல்ல எடுத்துக்காட்டுகளாக உமர்கய்யாமின் கவிதைகளின் ஆங்கில மொழியாக்கம் [Fitzerald], தமிழ் மொழியாக்கம் [கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை] இவற்றைச் சொல்லலாம்.

கவிதையின் சிறப்புக்குப் பொருள்நயம், சொல்நயம், ஒலிநயம் மூன்றும் வேண்டும். மொழியாக்கம் செய்த கவிதைகளில் காணும் பொருள் நயம் மூலநூல் ஆசிரியரைச் சேரும். ஆனால் அக்கவிதைகளில் மூலநூலில் காணும் அதே சொல்நயமோ ஒலிநயமோ காண்பது அரிது. மொழி யாக்கம் செய்பவர் தம் திறமையால் மூலநூலில் சொல்லப் பட்ட பொருள் மாறாத அளவில் மாற்று மொழியில் சொல் நயமும், ஒலிநயமும் ஊட்டலாம். மூலநூலின் ஆங்கில மொழியாக்கத்திலிருந்து [The Loom of Time : Chandra Rajan-Penguin Books] தமிழாக்கம் செய்த இக்கவிதைகளில் மிகவும் முயன்று முடிந்த அளவுக்குச் சொல்நயமும் ஒலி நயமும் தந்திருக்கிறேன். ஆங்கிலத்தில் நான் படித்துச் சுவைத்த கவிதைகளை என் தாய்மொழியாகிய தமிழில் ஆக்க வேண்டும் என்ற உந்துதலின் விளைவே இந்த நூல். சொல்நயம், ஒலிநயம் எப்படி இருப்பினும் காளிதாசரின் பொருள்நயம் மாறாதிருந்தாலே யான் பெற்ற இன்பம் தமிழகம் பெற என்பணி உதவும் என மகிழ்வேன்.

அ. மதியழகன்

# கோடைக் காலம்

கதிரோன் வெய்யில் கனலாய்ப் பரவும்,
நிலவின் வரவில் வேட்கை பெருகும்,
மேலும் மேலும் மூழ்கித் திளைக்க
ஆழ்நீர் எல்லாம் அழைப்பு விடுக்கும்,
பகலின் முடிவில் அமைதி நிலவும்,
இச்சை வெள்ளம் வேகம் தணிக்கும்,
எரிக்கும் கோடை வந்தது அன்பே!

எரிக்கும் கோடை வெப்பம் நீங்க
நீல வண்ண இரவில் நிலவு;
நீரில் எழுப்பிய கவினுறு மாளிகை;
குளிர்நீர் ஊற்று; சந்தனக் குழம்பு;
குளிர்ச்சி யூட்டும் பல்வகை மணிகள்
உலக மக்கள் நாடுவர் கண்ணே!

மாளிகை தோறும் மேல்தளம் எங்கும்
உணர்வு மயங்கக் கமழும் நறுமணம்;
காதலர் மூச்சில் இழையும் மதுமணம்;
யாழில் நன்கு மீட்டிய இன்னிசை;
காமம் தூண்டும் இத்தகு இன்பம்
கோடை நள்ளிரா காதலர் களிப்பர்!

மெல்லிய பட்டுடை; பொன்மணி மேகலை;
அழகினைப் பெருக்கும் நெளிந்த சிற்றிடை;
முத்து மாலை தவழும் நெஞ்சம்;
நறுமண நீரில் குளித்த கூந்தல்;
இவற்றொடு பெண்கள் கோடைக் காலம்
காதலர்க் கின்பம் நல்குவர் அன்பே!

நெளிந்து அசைந்து நடமிடும் சிற்றிடை!
சிவந்த வண்ணம் தோய்ந்த மலரடி!
காட்டு வாத்து மிழற்றும் குரலென
மணிகள் குலுங்க ஒலிக்கும் சிலம்பு!
ஆண்கள் இதயம் கடையும் இச்சை!

சந்தனத் தனங்கள் சூடிய முடியாய்,
பனித்துளி நிகரொளிர் முத்து மாலை!
இடையை அணைத்த பொன்மணி மேகலை!
இதய உளைச்சல் இல்லார் யாரே!

இளமை கொஞ்சும் உடலின் தசைகள்,
உயர்ந்த நெஞ்சம் அங்கம் எங்கும்
வியர்வைத் துளிகள் முத்தென மிளிரும்.
கோடை நாளின் தன்மைக் கேற்ப
கனத்த ஆடை பெண்கள் நீக்கித்
தனங்கள் தழுவ மென்துகில் அணிவர்!

சந்தன நீரில் தோய்ந்த விசிறிகள்
தந்தன நறுமண ஈரக் காற்று;
காதலி நெஞ்சின் நறுமலர் மாலை
தொட்டால் கிட்டும் தண்ணிய குளிர்ச்சி;
யாழில் ஒலிக்கும் இன்னிசை எல்லாம்
உறங்கும் காதல் தட்டி எழுப்பும்!

மின்னிடும் வெண்ணிற மாளிகைத் தளங்களில்
மகிழ்வுடன் உறங்கும் அழகிய மகளிர்
முகத்தினை இரவெலாம் நோக்கி ஏங்கித்
தன்குறை உணர்ந்து நாணிய நிலவு
விடியற் காலை வெளுத்துப் போகும்!

பிரிவுத் தீயில் இதயம் வேகும்,
வேற்றூர்ப் பிரிந்த ஆண்கள் யாரும்,
கதிரோன் கொடிய வெப்பம் எரித்த
பூமியில் கிளம்பிச் சுழன்று உயர்ந்த
தூசுகள் முகிலெனக் காணப் பொறாரே!

கோடைக் கொடிய வெப்பம் வருத்தும்
வறண்ட தொண்டை கொண்ட மானினம்
ஆங்கோர் வனத்தில் தண்ணீர் உண்டென
நீல வண்ணம் கண்டு எண்ணி
தொலைவில் அடிவான் நோக்கி ஓடும்!

களிப்பு நாடும் மனிதர் மனந்தனில்
நிலவு அணிசெயும் மனங்கவர் அந்தி
ஆசை உடனே தூண்டல் போலும்
காதல் மகளிர் கடைக்கண் நோக்கு
நளின அசைவுகள் ஆழ்ந்த முறுவல்!

கதிரோன் கொடிய வெப்பம் வருத்தப்
பொசுக்கும் மணலில் தொங்கிய தலையுடன்
இரைக்கும் மூச்சொடு துன்புற ஊர்ந்து
மயிலின் நிழலை நாடும் பாம்பு!

தாகம் கொடிது வருத்தும் சிம்மம்
நடுங்கும் பிடரி துவளும் நாக்குடன்
தாடை அகலத் திறந்து தவித்து
எட்டும் தொலைவில் யானை கண்டும்
வலியில் நிலையால் கொலாது நிற்கும்

எரிக்கும் சூரியக் கதிரால் வெறியொடும்
வறண்ட தொண்டை வாயில் நுரையொடும்
பெருகும் தாகத் துன்பம் தீர்ந்திட
நீரினைத் தேடி அலையும் களிறுகள்
சிம்மம் கண்டும் அஞ்சுவ தில்லை!

எண்ணிலாக் கொழுந்தொடு வேள்வித் தீயென
எரிக்கும் கதிரால் களைத்த மயிலோ
வண்ணத் தோகை அடியில் புகுந்து
தலையை நீட்டிப் படமெடுத் தாடும்
பாம்பினைக் கொத்த மனமிலா நிற்கும்!

வெப்பக் கதிரால் துன்புற வருந்தும்
காட்டுப் பன்றிக் கூட்டம் ஒன்று
சேற்றுப் புற்கள் முளைத்து வளர்ந்த
வறண்ட குட்டையின் சேற்றுக் கட்டியுள்
நீண்ட மூக்கின் உருண்ட முனையால்
கிழங்கினைக் கல்லி எடுக்கும் செய்கை
பூமியுள் ஆழ இறங்கும் தோற்றம்!

கொடிய சூரியக் கதிர்கள் சுட்ட
சேற்றுக் குட்டைத் தவளை யொன்று
தாகம் பெருகத் தவித்துக் களைத்த
கொடிய நாகப் பாம்பின் படத்தலைக்
குடைநிழல் அமரத் தாவிக் குதிக்கும்!

காட்டு யானைக் கூட்டம் ஒன்று
இடித்துத் தள்ளி மிதித்துச் செல்ல
வேரொடு பெயர்ந்த தாமரைக் கொடிகள்;
வீழ்ந்து கிடந்த இறந்த மீன்கள்;
பயத்தில் ஓடிப் பறந்த கொக்குகள்;
சேற்றுத் திரளாய்த் தோன்றும் ஏரி!

தாகம் தவித்த நாகம் ஒன்று
கூறாய்ப் பிளந்த நாவினை நீட்டி
ஈரக் காற்றினை நக்கிப் பார்க்கும்
முடியில் ஒளிரும் நாக மணியோ
ஒளிரும் சூரியக் கதிர்கள் பட்டு
மின்னி மினுக்கி அழகுற மிளிரும்
கோடை வெப்பக் கொடிய நஞ்சு
தகித்த நாகம் தவளை தாக்கா !

தாகம் வருத்தும் எருமைக் கூட்டம்
உயரத் தூக்கிய தலைக ளோடும்
நீரினைத் தேடியே உறிஞ்சிய மூக்கொடும்
குகைபோல் வாய்க்கடை உமிழ்நீர் வழிய
உதடுகள் சுற்றிலும் நுரைகள் பெருக
பழுப்பு நாக்கு வெளியில் தொங்கக்
குன்றுக் குகையின் நீங்கி வெளிவரும் !

பரந்து எரியும் காட்டுத் தீயில்
கரிந்து சாம்ப லாகும் தளிர்கள்;
ஓங்கி வீசும் சூறைக் காற்றில்
உயரப் பறக்கும் உலர்ந்த சருகுகள்;
கொடிய கோடை வெப்பக் கதிரில்
நீரெலாம் வற்றி இறங்கும் நீர்நிலை;
காட்டுப் புறத்தின் தோற்றம் கொடிது !

இலைகள் முற்றும் உதிர்ந்த மரங்களில்
புள்ளினம் அமர்ந்து மூச்சு வாங்கும்.
புதர்கள் அடர்ந்து வளர்ந்த குகையுள்
இளைத்த மந்திக் கூட்டம் இறங்கும்.
காட்டு எருதுகள் நீரினைத் தேடி
இங்கும் அங்கும் அலைந்து திரியும்
யானைக் கன்றுகள் விடாது முயன்று
கிணற்றில் இருந்து நீரினை இழுக்கும்!

பலத்த காற்று வலிந்து உந்தும்;
செந்தூர் இதழெனச் சிவந்த நெருப்பு,
மரத்தின் உச்சி புதர்கள் கொடிகள்
அனைத்தும் அணைக்கும் ஆர்வம் கொண்டு
ரோஜா மொட்டு விரிதல் போன்று
எல்லாத் திக்கும் பரந்து விரிந்து
எங்கும் பூமியை எரித்துச் செல்லும்!

காட்டு நிலத்தின் புறத்தே தோன்றிக்
கண்கள் கூசும் நெருப்பின் ஒளியில்
காட்டு உயிர்கள் களைத்துப் போகும்.
காற்று சுழற்றி உந்தித் தள்ளப்
பள்ளத் தாக்கில் பரவிப் படர்ந்து
உலர்ந்த மூங்கிற் புதரில் புகுந்து
வெடித்துச் சிதற வெளிப்படும் நெருப்பு
கணமும் வளர்ந்து புற்களில் படரும்!

காற்று தூண்டிய காட்டு நெருப்பு
காட்டு நிலத்தில் எங்கும் அலையும்;
பருத்திக் காட்டில் பலவுரு எடுக்கும்;
மெருகுப் பொன்னாய் மரக்குழி மின்னும்;
உயர்ந்த மரத்தின் உச்சியிற் தாவி
மரக்கிளை தன்னில் இலைகளைப் பொசுக்கும்

கொடுந்தீ வெப்பம் உடலினைச் சுடவே
காட்டு எருது களிறு சிம்மம்
பகையினை மறந்து நண்பர் போன்று
புல்வெளி துறந்து தீப்புண் ணுடனே
ஆற்றின் அகன்ற மணற்கரை ஒதுங்கும்!

இன்னிசை பொழியும் என்னரும் பெண்ணே!
குளங்கள் தாமரை பூத்துக் கிடக்க
மூழ்கித் திளைக்கக் குளிர்நீர் இருக்க
காற்றில் மலர்கள் நறுமணம் பரவ
முத்து மாலை குளிர்ச்சி கொடுக்க
நிலவு ஒளிரும் தளங்களில் இரவு
அழகிய மகளிர் பணிவிடை புரிய
மிகுந்த களிப்பில் கோடை செல்க!

# மழைக் காலம்

செருக்குள களிற்றுக் கூட்டம் போன்று
பொழியும் முகில்கள் துந்துபி முழங்க
மின்னல் கொடியொடு மத்தள இடியுடன்
மேன்மை உயர்ந்த மழையின் காலம்
காதலர் விரும்பி வரவு கூறிட
மன்னர் போன்று வந்தது அன்பே!

நீலத் தாமரை இதழ்கள் போலே,
அடர்ந்த மழைமுகில் எங்கும் நிறைந்து
பேறு காலப் பெண்ணின் மார்பெனக்
கொட்டிய கண்மை நிரவிக் கலந்தென,
சிலஇடம் ஒளியும் சிலஇடம் இருளும்
சேர்ந்த தோற்றம் காட்டும் வானம்!

தாகம் வருத்திய புள்ளினம் வேண்ட
நீரின் சுமையால் கீழே தாழ்ந்து
முகிலின் கூட்டம் மெதுவே நகர்ந்து
மழையின் தாரை பொழிந்து செல்லும்
இடியொலி செவிக்கு இனிமை சேர்க்கும்!

பாய்ந்து வீழ்ந்து பயத்தினை விளைக்கும்
இடியினை எறிந்து கருமுகில் கூட்டம்
மின்னல் கீற்றுடன் வான்வில் வளைத்துத்
தீட்டிய முனையுடன் கொடிய அம்பெனக்
கூரிய மழையின் தாரை தன்னை
விடாது பொழிந்து வேற்றூர்ப் பிரிந்த
ஆடவர் நெஞ்சம் காயம் செய்யும்!

இளந்தளிர்ப் புற்கள் வளர்ந்த பூமி
பச்சை மரகத ஒளியினை வீசி
செந்நிற மலரின் மொட்டுகள் அரும்ப
பச்சை சிவப்பு வண்ண மணிகள்
அணிந்த பெண்ணாய் அழகுற மின்னும்!

மழைநாள் களிக்கக் காத்துக் கிடந்த
மயிலினம் விரைந்து கொத்திக் கோதி
அழகிய தோகை அகல விரித்து
மகிழ்ந்து கூவிக் களிநடம் ஆடும்!

காம இச்சைக் கற்பிலாப் பெண்ணென
குழம்பிய நீரால் நிரம்பிய நதிகள்
கரையின் மரங்களைப் பெயர்த்து வீழ்த்திக்
கடலினை நோக்கி விரைந்து ஓடும்!

மேய்ந்த நுனிப்புல் தாடை நீங்கித்
தவறி வீழ்ந்து சிதறிக் கிடக்கும்;
செழித்து வளர்ந்த பசும்புல் தளிர்கள்,
மொட்டு அரும்பிய அழகிய மரங்கள்
அணிசெய விளங்கும் விந்தியக் காடுகள்
காண்போர் மனத்தைக் கவர்ந்து இழுக்கும்!

காட்டு நிலத்தில் ஓடை அருகே
குமுத மலராம் விழிகள் மருள
எளிதே பயந்து மிரளும் சிறுமான்
கூடித் திரியும் வெட்ட வெளிகள்
மனத்தை மயக்கும்; இதயம் ஏங்கும்!

மீண்டும் மீண்டும் மேகம் உறுமும்
இரவோ மிக்க இருளாய் இருக்கும்.
மின்னல் ஒன்றே வழியைக் காட்டும்
எனினும் தள்ளிரா இச்சை உந்த
நாயகர் சேர நங்கையர் செல்வர்.

மின்னல் மின்ன இடியொலி முழங்க
அச்சுற வெடித்துச் சிதறும் மேகம்.
நடுங்கும் பெண்கள் அருகே உறங்கும்,
பிறமகள் காமக் குற்றம் உடைய
காதல் கணவரை ஆரத் தழுவுவர்!

நீலத் தாமரை விழியின் கண்ணீர்
கோவைக் கனியாம் இதழில் இழிய
வேற்றார் சென்றோர் துணைவியர் துயரொடு
அணிமணி மலர்கள் நறுமணம் துறப்பர்!

தவளைக் குஞ்சுகள் தவிப்பொடு காணப்
பூச்சி தூசு புல்லின் துணுக்கு
அனைத்தும் கலந்த அடர்ந்த நீராய்
அழுக்கு வண்ணம் கொண்ட மழைநீர்
பாம்பென நெளிந்து கீழே நோக்கி
கல்முள் கரட்டுப் பாதை கடக்கும்

தாமரை தனது இதழ்கள் உதிர்த்த
குளமது துறந்த மூடத் தேனீ
தேனைத் தேடி இன்னிசை பாடி
அன்று அலர்ந்த தாமரை மலரென
நீல வண்ணக் கண்கள் கொண்ட
ஆடும் மயிலின் தோகை மொய்க்கும்!

முதல்முறை மழைமுகில் இடியொலி கேட்டுக்
கோபம் கொண்ட காட்டுக் களிறுகள்
மீண்டும் மீண்டும் உரக்கப் பிளிறும்
குமுத மலரென ஒளிரும் மத்தகம்
ஒழுகும் மதத்தால் நனைந்து இருக்கத்
தேனீ அவற்றைச் சுற்றி மொய்க்கும்!

எங்கும் மின்னும் நீரின் வீழ்ச்சி!
மயில்கள் ஆடத் துவங்கும் களிநடம்!
தாழ்ந்த மழைமுகில் பாறை முத்தம்!
மலைகள் தூண்டும் தாளா ஏக்கம்!

கதம்ப வனத்தின் ஊடே வீசி
மரங்கள் அசைத்து மலர்மணம் சுமந்து
முகிலொடு இணைந்து மழைத்துளி குளிர்ந்த
தென்றல் யார்க்கு ஏக்கம் தராது?

கூந்தல் கற்றை இடைவரை இழிய
நறுமண மலர்கள் செவிபின் அணைய
முத்து மாலை மார்பில் வருட
மூச்சுக் காற்றில் மதுமணம் கமழக்
காதலர் நெஞ்சில் தீயிடும் பெண்கள்!

வான்வில் ஒளிர மின்னல் மின்ன
நீரொடு நிறைந்து தொங்கும் முகில்கள்—
கண்கள் கூசும் மணியிழை காதணி
சலங்கை கோர்த்த மேகலை மகளிர்—
இரண்டும் ஒன்றாய் இணைந்து கவர்வது
வேற்றூர் செல்லும் ஆடவர் நெஞ்சம்!

கேசரி மொட்டும் கேதகி அரும்பும்
அன்று அலர்ந்த கதம்ப மலரும்
பின்னிக் கட்டிய நறுமலர் மாலை
சுருண்ட முடியில் பின்னிச் சேர்த்தும்
மலரால் பல்வகை அழகிய வடிவக்
காதணி செய்தும் மாதர் அணிவர்!

அழகிய கூந்தல் மலர்மணம் ஊட்டி
அங்கம் சந்தனக் குழம்பு தேய்த்து
முன்னிரா நேரம் இடியொலி கேட்டு
முதியோர் உறையும் அறையின் நீங்கி
விரைந்து அவர்கண் படாது நழுவி
உறங்கும் அறையுள் மகளிர் நுழைவர்!

நீலத் தாமரை இதழ்கள் போன்ற
நீல வண்ண உயர்ந்த முகில்கள்
மழையைச் சுமந்து கீழே தாழ்ந்து
மெல்ல வான்வில் ஒளிரப் போந்து
மென்காற் றசைக்க மெதுவே நகர்தல்
வேற்றூர்ப் பிரிந்த கணவரை எண்ணித்
துயரில் வாடும் மகளிர் நெஞ்சம்
கவர்ந்து செல்வது போலத் தோன்றும்!

புதுமழை பெய்து வறட்சி நீங்கும்.
கதம்ப மலர்கள் முகிழ்த்து வெடிக்கும்.
கேதகி மொட்டு அரும்பிச் சிரிக்கும்.
காற்றின் அசைவில் மரக்கிளை ஆடக்
காடு சிலிர்த்துக் களிநடம் ஆடும்!

கருமுகில் கூடும் பருவக் காலம்!
கதம்ப இலைமலர் காதணி யாக
வகுள மலரும் கேதகி மொட்டும்
அன்று அலர்ந்த பல்வேறு மலரும்
ஆசைக் கணவர் உள்ளம் விரும்ப
அழகிளம் மனைவியர் தலையில் அணிவர்!

அழகிய மார்பில் முத்து வலைகள்!
அழகு வடிவும் நெளிவும் கொண்ட
சிற்றிடை இளநிறப் பட்டு மென்துகில்!
புதுமழைத் துளிதரும் குளிர்ச்சி உணர
தொப்புள் மேலெழும் சிறுமயிர்க் கோடு!
வயிற்றினை மறைக்கும் கவர்ச்சி மடிப்புகள்!

மலரின் தாது ஊட்டிய மணமொடு
புதுமழைத் துளியால் குளிர்ந்த காற்று!
மலரின் சுமையால் தாழும் மரங்கள்
நடனம் ஆடக் கற்றுத் தருதல்
வேற்றூர்ப் பிரிந்த ஆடவர் நெஞ்சம்
கொள்ளை கொண்டு கலக்கும் காட்சி!

நீரின் சுமையால் மிகவும் குனிந்தால்
பெருமை படைத்த இந்த மலையே
நமக்குத் தக்க துணையென எண்ணி
கருமுகில் தாழ்ந்து மழையினைச் சொரிந்து
கோடை கொடிய காட்டுத் தீயால்
கருகித் துன்புற வருந்தி நின்ற
விந்திய மலைக்கு மகிழ்ச்சி யூட்டும்!

காதல் மகளிர் மனங்கவர் காலம்!
மரம்கொடி புதர்க்கு என்றும் தோழன்!
எல்லா உயிர்க்கும் மூச்சும் வாழ்வும்!
இத்தகு நலமிகு இம்மழைக் காலம்
உந்தன் நன்மைக் கேற்ற தேவை
அனைத்தும் வழங்கி அருளே செய்க!

# இலையுதிர் காலம்

கோரைப் புற்கள் மலர்ந்த தோகை
இளநிறப் பட்டு மென்துகில் அணிந்து
முற்றும் மலர்ந்த தாமரை முகத்தொடு
சிலம்பின் பரல்கள் ஒலிக்கும் இசையாய்க்
காட்டு வாத்து மிழற்றும் குரலொடும்
ஒயிலாய்ச் சாய்ந்த அழகிய உருவாய்
மெல்லச் சாய்ந்த முற்றிய கதிரொடும்
மனதை மயக்கும் புதுமணப் பெண்ணாய்
இலையுதிர் காலம் இங்கே வந்தது !

கோரை மலரால் ஒளிரும் பூமி!
நிலவின் கதிரால் குளிரும் இரவு !
காட்டு வாத்துக் கூட்டம் நிறைந்து
கவினுற விளங்கும் ஆற்று ஓடை !
தாமரை மலர்கள் நிறைந்த குளங்கள்;
நறுமண வெண்மை மல்லிகைத் தோட்டம்;
மரங்கள் மலர்ந்த வனங்கள் அழகு !

மின்னித் துள்ளும் மீனின மேகலை,
வெண்புள் வரிசை மாலை அணிந்து
அகன்று வளைந்த மணற்கரை விலாவொடு
காதல் வயத்த கன்னியர் போல
நதிகள் மெதுவே நகர்ந்து செல்லும்!

வெள்ளி அன்ன மெல்லிய சிப்பி
எளிதில் எங்கும் மிதப்பது போலே
முற்றும் மழையினைப் பிழிந்து வற்றிய
முகிலின் கூட்டம் காற்று அலைக்க
இங்கும் அங்கும் செல்லும் போதில்
நூற்று விசிறிகள் காற்று வீசும்
மன்னர் மன்னராய் வானம் தோன்றும்!

வானம் மைத்திரள் கருமை கொண்டது
மலரின் தாது படிந்த பூமி
விடியற் கால வண்ணம் கொண்டது
ஆற்றின் கரைகள் முற்றிய கதிர்வயல்
மின்னும் பொன்னிற வண்ணம் கொண்டது
இளமைக் காலம் ஏக்கம் கொள்ளா
இதயம் எவர்க்கு உண்டோ சொல்க!

உச்சியிற் சிறுகிளை தென்றலிற் சிக்குறும்,
இலைகள் இடுக்கில் பூங்கிளை வளரும்,
பருகுதேன் வழியத் தேனீ சுற்றும்,
இம்மர அழகில் உளையா மனமோ ?

எண்ணிலா விண்மீன் அணிசெயும் மணியாய்
ஒளிரும் நிலவொளி ஆடை கொண்டு
இரவு மங்கை தன்னைப் போர்த்த,
நிலவு முகமோ மறைக்கும் முகிலினை
விலக்கி முனைந்து முன்னே தோன்றும்
நாள்தொறும் மெல்ல மெல்ல வளரும்
பெருமை படைத்த பெண்மைப் பருவம்
அடியெடுத் தேகும் அழகிய கன்னி !

காட்டு வாத்துகள் புலம்பும் மணிஒலி !
கமலத் தாது தந்த செந்நிறம் !
குட்டி வாத்துகள் மூழ்க அதிர்ந்து
வட்ட வடிவில் பரவும் சிற்றலை !
கரிய வாத்துகள், சாரைக் கொக்குகள்
கரையில் மோதிக் கத்தும் ஓசை !
காண்போர் உள்ளம் களிக்கும் நதிகள் !

விழிக்குக் களிப்பை யூட்டும் நிலவு
ஒளியால் அனைவர் நெஞ்சம் பிணிக்கும்
இன்பம் தரவல அந்தி நிலவு
பனிபோல் குளிர்ந்த கதிர்கள் சொரிந்து
கணவர் பிரிவெனும் நஞ்சுக் கணையால்
புண்படு மகளிர் அங்கம் எரிக்கும் !

காய்த்துச் சாய்ந்த கதிர்கள் அசைத்து
மலரொடு பெருமரம் தாழ்த்தி ஆட்டி
தாமரை அடர்ந்த குளங்கள் அலைத்து
இளமை உள்ளம் உளைக்கும் தென்றல் !

தாமரை அல்லி ஒளியுடன் வளர,
காட்டு வாத்துக் காதல் இணைகள்
காதல் மதுவில் மயங்கி நீந்த
வீசும் காற்றாம் விடியல் மூச்சில்
சிற்றலை எழவே தோன்றும் குளங்கள்
மூச்சும் எழாது அயர்த்தும் அழகு
விரைந்து இதயம் ஏங்கப் பற்றும் !

முகில்கள் விழுங்கிய இந்திரன் கணைகள் !
ஒளிர்தல் இல்லா வான்கொடி மின்னல் !
காற்றெழச் சிறகினை அசையா நாரை !
முகமெழ வானம் நோக்கா மயில்கள் !

மாறன் அனுப்பிய மயிலின் நடனம்!
நடன நிகழ்ச்சி முடிந்த பின்னர்
காட்டு வாத்தின் இன்னிசை நிகழ்ச்சி!
மலர்நாள் சிற்பி அழகு தேவதை
கதம்ப அசோக மரங்கள் துறந்து
சப்த பர்ணா மரத்தில் உறையும்!

மல்லிகை மலர்கள் பரப்பும் நறுமணம்!
புள்ளிசை எதிரொலி கேட்கும் அமைதி!
காட்டின் வெட்ட வெளியில் அலையும்
கமல நீலக் கண்ணுள மான்கள்!
அனைவர் உளத்து அமைதி குலைத்து
நெஞ்சில் நீண்ட ஏக்கம் எழுப்பும்!

சிவப்பு வெள்ளைத் தாமரை சீண்டி
இடையே மெல்லப் புகுந்து குளிர்ந்து
இதழ்கள் ஓரப் பனித்துளி துடைத்து
விடியற் காலம் தென்றல் காற்று
இதயம் குலுக்கி ஏக்கம் எழுப்பும்!

காட்டு வாத்தும் சாரைக் கொக்கும்
கத்தும் ஓசை காற்றில் ஒலிக்க
கதிர்கள் அடிக்கும் களத்தில் குவிந்து
முற்றிய கதிர்கள் பரந்து கிடக்கக்
கிராம எல்லையில் பசுவின் மந்தை
கூட்டம் கூட்டமாய்ப் படுத்துக் கிடக்கக்
கண்ட மக்கள் களிப்பு எய்துவர்!

காட்டு வாத்தின் கண்கவர் நடையோ
கன்னியர் மனங்கவர் நடையினை வெல்லும்!
முற்றும் மலர்ந்த தாமரை மலரோ
முழுமதி முகத்தின் ஒளியினை வெல்லும்!
நீல வண்ண அல்லி மலரோ
காதல் ஒளிரும் விழியினை வெல்லும்!
நீரில் தோன்றும் மெல்லிய சிற்றலை
அழகிய புருவ நடனம் வெல்லும்!

சிறுகிளை மலரொடு சியாமாக் கொடிகள்
மகளிர் அணிக்கை ஒளியினைக் கவரும்!
அசோக மலர்கள் ஊடே தோன்றும்
அன்று அலர்ந்த மல்லிகை மலர்கள்
நிலவென மிளிரும் புன்னகை வெல்லும்!

நுனியில் சுருண்ட கூந்தல் கற்றை
மல்லிகை அரும்புகள் நிறைத்த கன்னியர்
பொன்னணி அழகுச் செவிகள் பின்னே
பல்வகை நீலத் தாமரை அணிவர்!

சந்தன நீரில் தோய்ந்த முத்துகள்
திரண்ட நெஞ்சம் அழகு செய்யும்
சலங்கை கோர்த்த மேகலை அணியோ
அகன்று நெளிந்த இடையில் அழகுறும்
தாமரைப் பாதம் சிலம்புகள் இசைக்க
உள்மன ஆழம் களிப்பு வளர
மகளிர் அழகு பெருகச் செய்வர்!

நிலவொடு எண்ணிலா விண்மீன் நிறைந்து
முகில்கள் எதுவும் இல்லா வானம்,
அல்லி மலரால் நிறைந்து அகன்று
அரச அன்னம் மெல்ல நீந்தும்
மரகத நீலப் பச்சை ஒளிரும்
ஏரியின் நிகர்த்த அழகொடு மிளிரும் !

தெளித்த விண்மீன்; தெளிந்த நிலவொளி
இலையுதிர் காலம் வானம் இனிது !
மழைமுகில் கூட்டம் ஏதும் இலாது
எல்லாத் திக்கும் அமைதி அழகு !
காய்ந்த நிலங்கள்; மீன்னும் தண்ணீர்;
தாமரை தழுவிக் குளிர்ந்த தென்றல் !

காலைக் கதிரில் விழித்தெழு கமலம்
அழகு மங்கையர் முகமென மலரும் !
நிலவு செல்ல வாடும் அல்லி,
கணவர் பிரிந்த மனைவியர் புன்னகை !

காதலி அவளது கரிய கண்ணொளி
நீலத் தாமரை மலரில் ஒளிர,
பொன்னணி மேகலை மணியின் ஒலியே
காட்டு வாத்தின் காதல் குரலாய்,
கீழிதழ் இரத்தச் சிவப்பு வண்ணம்
கோவைக் கனியின் கொத்தில் காண
மனையைப் பிரிந்தோர் மனமது மயங்கும் !

நிலவொளி மகளிர் முகமே கொடுத்தும்
காட்டு வாத்தின் இனிய குரலை
மணிகள் இழைத்த சிலம்பே கொடுத்தும்
கோவைக் கனியின் சிவப்பு வண்ணம்
மெருகொடு மின்னும் கீழிதழ் கொடுத்தும்
வழங்கும் வள்ளல் இலையுதிர் காலம்
இன்று விடைபெறும்; எங்கு செல்லும்?

முற்றும் மலர்ந்து வெளுத்துச் சிவந்த
தாமரை மலர்கள் தனது முகமாய்
நீல வண்ண அல்லி மலர்கள்
விரிந்த பெரிய கரிய விழியாய்
புதிய வெண்மைக் காசா மலரின்
ஒளிரும் தோகை உடையாய் அணிந்த
இலையுதிர் காலம் காதலன் போலே
உனது இதயக் களிப்பினை அருள்க!

# பனிக் காலம்

கோதுமை இளந்தளிர் களிப்பினை யூட்டும்
முற்றிய நெற்கதிர் பொன்நிகர் தோற்றம்
மலர்ந்த பனிமலர்; வாடிய தாமரை
கனத்து வீழும் பனித்துளி யுடனே
பனியின் காலம் இங்கு வந்தது !

சந்தனக் குழம்பு தோய்ந்து வெளுத்து
பனித்துளி மல்லிகை நிலவு என்ன
ஒளிபெற விளங்கும் முத்து மாலை
மென்மை மகளிர் திரண்ட மார்பின்
மேன்மை மேலும் பெருக்குவ தில்லை!

அழகுற அசைந்து செல்லும் கன்னியர்
உருண்டு திரண்ட இரண்டு தனங்கள்
மெல்லத் தழுவா மென்துணிக் கச்சை !
சிற்றிடை நில்லாப் பட்டு மென்துகில் !
கைகள் இறுகப் பற்றா வளைகள் !

அழகு இளமைச் செருக்கில் மகளிர்
இடையில் பொன்மணி மேகலை அணியார் !
கமல மலரென ஒளிரும் காலில்
காட்டு வாத்தின் மணிக்குரல் அன்ன
ஒலியினை இசைக்கும் சிலம்பு அணியார் !

கூந்தல் கற்றை நறும்புகை யூட்டி
தாமரை முகத்தில் ஒப்பனை எழுதி
நறுநெய் குழைத்து உடலில் தேய்த்துக்
காதல் திருவிழா கன்னியர் எடுப்பர்!

காதல் செய்து சோர்ந்து வெளுத்து
காதல் காயம் இதழில் பட்டுக்
களிக்கும் நேரம் தனிலும் கன்னியர்
உரக்கச் சிரிக்க அஞ்சி இருப்பர்!

மகளிர் தனங்கள் அழகு அறிந்து
இறுக அழுந்தும் நிலைக்கு வருந்தி
புல்லிதழ் நுனியில் பனித்துளி பெய்து
விடியல் கதறும் பனியின் காலம்!

முற்றிய நெற்கதிர் நிறைந்த வயலில்
கொக்குப் பெடைகள் கூவி அழைக்கும்
ஒலியொடு இனிமை எங்கும் அலையும்
ஆ! ஆ! உளத்தில் எத்துணை உளைச்சல்!

குளிர்ந்த நீரொடு ஒளிரும் குளத்தில்
நீலத் தாமரை அழகொடு மலரும்.
காட்டு வாத்து களிப்பில் கூடும்.
எல்லா உளமும் எடுத்துச் செல்லும்
எல்லை இல்லா இன்பக் களிப்பு!

காதலன் பிரிந்த கன்னியைப் போலே
குளிரும் பனியில் வெளுத்துச் சோர்ந்து
பலத்த காற்றில் அலைபட நடுங்கும்
மலர்க்கொடி வெளுத்து நின்றது அன்பே!

நறுமண மலர்மது வாயில் மணக்க
ஒன்றிய மூச்சால் உடலே மணக்க
ஒருவர் கையில் ஒருவர் இணைந்து
இனிய காதல் கவிதை கலக்க
ஆணும் பெண்ணும் உறங்கும் காட்சி!

இதழில் காதல் கடியின் காயம்
நெஞ்சில் நகங்கள் பதித்த வடுக்கள்—
இளமை பொங்கும் கன்னியர் தம்மிடம்
இரக்கம் இலாது இன்பம் பெற்ற
நிலையினைத் தெளிவாய்க் காட்டும் குறிகள்!

காலை இளவெயில் சுகமாய்க் காய்ந்து
கன்னி யொருத்தி கை ஆடி கொண்டு
ஒளிரும் மலர்முகம் ஒப்பனை செய்கையில்,
இதழின் அமுதம் அருந்தும் நேரம்
காதலன் செய்த காயக் குறிகள்
இதழைப் பிதுக்கிப் பார்த்துக் களிக்கும்!

காதல் நாடகம் கடிது நடத்தி
அங்கம் சோர்ந்த இன்னொரு பெண்ணோ
சாய்ந்த தோளில் கலைந்த கூந்தல்
பரந்து விரிந்து காற்றில் பறக்க
இளவெயில் கதிரின் வெப்ப சுகத்தில்
இரவில் நீண்ட நேரம் விழித்து
நொந்து சிவந்த தாமரை விழியின்
இமைகள் மூடி அயர்ந்து உறங்கும் !

உயர்ந்து திரண்ட மார்பினைச் சுமந்து
கொடியுடல் அசையும் மற்றை மகளிர்
இரவில் நுகர்ந்து நறுமணம் இழந்த
கசங்கிய கொத்து மலர்கள் நீக்கி
மழைமுகில் அடர்த்தி நடுநிசிக் கருமைக்
கூந்தல் மீண்டும் ஒப்பனை செய்வர் !

கரிய கூந்தல் சுருண்டு தவழக்
கீழிதழ்க் கவர்ச்சி ஒளியொடு மீள
ஓரக் கண்ணால் இன்னொரு கன்னி
காதலன் சுவைத்த தன்னுடல் பார்த்து
நகத்தின் குறிகள் உற்று நோக்கிக்
களிப்புடன் கச்சை மார்பில் அணிவாள் !

காதல் களியில் நீண்ட நேரம்
களைத்துச் சோர்ந்த தமது உடலில்
இதமாய் எண்ணெய் தேய்க்கும் மகளிர்
மார்பும் தொடையும் காற்றில் சிலிர்க்கும்!

பனியின் துளிகள் கனத்து வீழும்,
புள்ளின் இன்குரல் காற்றில் கலக்கும்,
கொழித்த அறுவடைத் தானியப் பொன்மணி
கிராமக் களத்தில் நிரம்பி வழியும்,
பல்வகைச் சிறப்புத் தகுதி படைத்து
மங்கையர் உள்ளம் கவர்ந்து இழுக்கும்
மின்னும் இந்தப் பனியின் காலம்
இன்பம் எல்லாம் உனக்கும் அருள்க!

# குளிர் காலம்

முதிர்ந்த நெற்கதிர்; கரும்புக் குவியல்;
காற்றில் ஒலிக்கும் புள்ளின் இன்குரல்;
பொங்கி வளரும் காதல் உணர்வு
மங்கை நல்லோர் விரும்பும் குளிர்நாள்
இங்கே இன்றிதோ வந்தது அன்பே!

ஆண்டில் இனிய இந்தக் காலம்
பலகணி இறுக மக்கள் மூடுவர்;
வெய்யில் காய்வர்; கணப்பு மூட்டுவர்;
ஆடவர் கன்னியர் துணையை நாடுவர்!

நிலவொளி குளிர்ந்த சந்தனக் குழம்போ
பனித்துளி குளிர்ந்த தென்றல் காற்றோ
நிலவு ஒளிரும் மாளிகைத் தளமோ
ஆண்டில் இந்நாள் மனமது மகிழா!

கனத்து வீழும் பனித்துளி குளிர்ந்தும்
மின்னும் பனிநிலா இன்னும் குளிர்ந்தும்
வெளுத்த விண்மீன் ஒளிவிளக் கேற்ற
அழகுற விளங்கும் குளிர்நாள் இரவுகள்
மக்கள் சுகமோ மகிழ்வோ தராது!

காதல் களியினை விழையும் மனைவியர்
மலர்மது மணக்கும் தாமரை முகத்தொடு
நறுமணப் பொருட்கள் வெற்றிலைச் சுருளொடு
உறங்கும் தனியறை இரவில் புகுவர்!

பன்முறை கசந்து வசவு பாடினும்
காதல் ஒழுக்கம் தவறும் கணவர்
மதுவில் மயங்கிக் குற்ற உணர்வொடு
நடுங்கக் காணும் மனைவியர், எனினும்
காதல் விழைந்து குற்றம் மறப்பர்!

நெடிய இரவில் காதல் களியில்
காமம் கொண்ட இளமைக் கணவர்
உந்தும் காதல் வெறியில் விடாது
நீண்ட நேரம் சுவைத்த கன்னியர்
இரவின் முடிவில் கால்கள் பின்னிட
வலிக்கும் உடலொடு வெளியில் வருவர்!

அழகுக் கச்சை மார்பினை இறுக்க
செழித்த வண்ணப் பட்டு மென்துகில்
கவர்ச்சி யூட்டி உடலினை மறைக்க
மலர்கள் கூந்தல் கற்றை சூட
குளிர்நாள் அணிகள் மகளிர் அணிவர்!

புலன்கள் ஒளிரும் அழகு மாதரை
மஞ்சள் தேய்த்துப் பொன்னென மிளிரும்
நெஞ்சம் இறுக அழுந்தச் சேர்ந்து
அரும்பும் இளமை இன்பம் சுவைத்துக்
குளிரை விரட்டி உறங்கும் காதலர்!

காதல் உணர்வு உச்சம் தூண்டும்
சிறந்த சுவையுள தேர்ந்த மதுவினை
இளமை மகளிர் கணவர் தம்மொடு
பெருகும் களிப்பில் இரவில் பருகுவர்
மதுவில் மிதக்கும் மல்லிகை மலர்கள்
அவர்தம் நறுமண மூச்சில் நடுங்கும்!

ஆசைப் பெருக்கு அடங்க விடியலில்
அணைப்பில் இறுகிய அரும்பு நெஞ்சொடு
கணவர் இரவில் சுவைத்த தன்னுடல்
கூர்ந்து நோக்கி மகிழ்ந்து சிரித்துத்
தனியறை நீங்கி வெளிவரும் மங்கை!

அகன்ற இடுப்பு; ஆழ்ந்த தொப்புழ்;
அழகிய மேன்மைச் சிற்றிடை தன்னொடு
எழில்மிகு சுருள் நுனிக் கூந்தல் கற்றை
அவிழ்ந்து பறக்க மலர்ச்சரம் வீழ
விடியலில் தனியறை நீங்கி வெளிவரும்
இன்னொரு அன்புக் காதல் மனைவி!

பொன்னின் தாமரை மின்னும் முகங்கள்;
நீண்ட நீர்விழி; சிவந்த இதழ்கள்;
தோளில் புரண்டு தவழும் கூந்தல்;
அழகுத் தேவதை தன்னை நிகர்த்துக்
காலைப் பனியில் ஒளிரும் மகளிர்!

அகன்ற இடுப்புச் சுமையுடன் கன்னியர்
இடையைச் சற்றே மெல்லச் சாய்த்து
தனங்கள் சுமந்து தளர்ந்து நகர்வர்;
இனிய காதல் சடங்கின் விளைவால்
இரவில் கசங்கிய ஆடை களைந்து
பிறிதோர் ஆடை பகலில் அணிவர்!

நெஞ்சில் நகக்குறி உற்று நோக்கியும்
இளந்தளிர்க் கீழிதழ்க் காயம் தொட்டும்
காதல் இலக்கின் வெற்றிக் குறியெனக்
கன்னியர் இவற்றை எண்ணி மகிழ்ந்து
காலை வேளை ஒப்பனை செய்வர்!

பனையின் வெல்ல இனிப்புக் குவியல்;
பொங்கற் சோறும் கரும்பும் நிறைந்த
குளிரின் காலம் காதல் களிவெறி
மாறன் செருக்குற ஏறும் உச்சம்!
பிரிந்த காதலர் மிகுந்த துன்புறும்
இந்நாள் என்றும் உனக்கு மங்களம்!

# வசந்த காலம்

மாம்பூக் கொத்துகள் கூரிய கணையாய்
தேனீ வரிசை ஒலிக்கும் நாணாய்
மதனன் பக்தர் இதயம் பிளக்க
வசந்த வீரன் வந்தான் அன்பே !

மலர்கள் பூத்துக் குலுங்கும் மரங்கள் !
முழுதும் தண்ணீர் சூழ்ந்த தாமரை !
காற்றில் கலக்கும் நறுமண இனிமை !
காதல் நாடும் கன்னியர் உள்ளம்!
காலை இனிமை; பகலோ களிப்பு !
எல்லாம் இனிய வசந்த காலம் !

குளத்தின் தண்ணீர்; நிலவின் பேரொளி
மலரொடு தாழும் மாமரக் கிளைகள்
மணியிழை மேகலை மங்கையர் அழகு
எதிலும் வசந்தம் எழிலே பொழியும் !

செந்நிற வண்ணம் தோய்த்து நெய்த
மெல்லிழைப் பட்டுடை இடையினைத் தழுவ
மஞ்சள் தோய்த்துப் பொன்னென மின்னும்
மென் துகில் பட்டுடை மார்பினில் தவழ
மனதில் நிறைவொடு மகளிர் அணிவர் !

அலர்ந்த மலர்கள் செவியில் தொங்கும் !
அசையும் கருங்குழல் கோலம் இழைக்கும்!
மணக்கும் மல்லிகை அசோக மலர்கள்
மகளிர் அழகுப் புலன்கள் உயர்த்தித்
தமக்குத் தாமே பெருமை சேர்க்கும் !

சந்தனக் குழம்பு வெண்மை தோய்ந்த
முத்து மாலை நெஞ்சம் வருட
காப்பு வளையும் கைகள் பற்ற
பொன்மணி மேகலை இடையினைத் தழுவக்
காதல் துயருறும் பேதை மகளிர் !

அழகிய மகளிர் தாமரை முகத்தில்
எழுதிய பூவிதழ் இலைவரி இடையே,
நவமணி இடையே இழைத்த முத்தென
வியர்வைத் துளிகள் விரவிய அழகு !

தொல்லை செய்யும் காதல் வலியில்
உள்ளம் தளர்ந்து மாதர் மெலிவர்;
ஆருயிர்க் கணவர் அருகில் இருப்பின்
உயிர்த்து அமைதி உள்ளம் பெறுவர்
இன்றோ அமைதி இழந்து ஏங்குவர் !

தமது அழகில் தாமே கிறங்கும்
மூச்செழ மறந்து குழம்பி மயங்கும்
ஆசையில் சோர்ந்து மீண்டும் மீண்டும்
சோம்பல் முறிக்கும் அழகு மங்கையர்
இளைத்து வெளுக்கச் செய்யும் அனங்கன் !

உருவிலி அனங்கன் பல்லுரு எடுப்பான்:
நறுமது மங்கையர் அலையும் கண்கள்;
இறுகிய மார்பு; வெளுத்த கன்னம்;
குறுகிய சிற்றிடை; பெருத்த பிட்டம் !

தெளிந்து நடமிடும் வளைந்த புருவம்;
கடைவிழிப் பார்வை; குழறும் சொற்கள்;
மதுவில் மயக்கம்; தூக்கக் கலக்கம்;
சோர்ந்த மங்கையர் அங்கம் எங்கும்
கொள்ளை அழகுடன் மாறன் அமைத்தான்

ஆர்வம் மிகுந்து சோர்ந்த கன்னியர்,
மஞ்சள் புனுகு மணமுள விதைகள்
சேர்த்துக் கலந்த சந்தனக் குழம்பு
தங்கள் அழகுத் தனங்கள் பூசுவர் !

வசந்தக் காய்ச்சல் தாக்குறு மாந்தர்
கனத்த ஆடை அனைத்தும் துறந்து
அங்கம் குளிர நறுமணம் சேர்த்த
சிவந்த வண்ண மென்துகில் அணிவர்!

மாம்பூக் கொத்தின் தேனை மாந்திய
ஆண் குயில் பெடைக்கு முத்தம் ஈந்திடும்
தேனீ தானும் தாமரை சேர்ந்து
இன்னிசை பாடிக் காதலி செவியில்
இனிய புகழுரை மெல்லச் சொல்லும்!

கிளைகள் மலர்கள் அழகினைக் காட்டச்
சிவந்த இளந்தளிர்ச் சிறுகிளை தொங்க
தென்றல் அசைக்கும் மாமரம் கண்டு
இளைய மங்கையர் இதயம் ஏங்கும்!

இளந்தளிர் தோன்றும் அசோக மரங்கள்
அடிவரை பவளச் சிவப்பு அரும்புகள்!
இளமைப் பருவம் எய்தும் பெண்கள்
விழிபடின் இதயம் வேதனை சூழும்!

இளங்கொடி விளைக்கும் இளந்தளிர் இலைகள்
தென்றல் காற்றில் அசைந்து ஆடிட
மயங்கிய தேனீ அழகிய மலர்களில்
மயங்கி முத்தம் இடுவது நோக்கும்
காதலர் ஏக்கம் இதயம் தாக்கும்!

காதலி முகத்தின் எழிலை நிகர்த்த
அன்று அலர்ந்து சிறந்து ஒளிரும்
மலர்க்கிளை மரங்களில் தோன்றக் காணில்
மாறன் கணைகள் பறந்து தாக்கும்
நோவில் துடியா இதயம் உண்டோ?

மலர்நிறை மரங்கள் தென்றலில் ஆடச்
சுற்றிலும் எங்கும் செம்மரக் காடாய்
வசந்தம் கணத்தில் மாற்றிய மாநிலம்
செந்நிறப் பட்டு மென்துகில் அணிந்த
புதுமணப் பெண்ணாய் ஒளியொடு விளங்கும்!

கிளியின் அலகெனச் சிவந்த மலர்கள்
அழகிய பெண்ணிடம் ஆடவர் இழந்த
இதயம் பொடியாய் இடிப்பது இலையோ?
பொன்னென ஒளிரும் சண்பக மலர்கள்
அன்னதை எரித்துக் கருக்கிட இலையோ?
குயிலின் இனிய தேனிசைக் குரலோ
இரங்கல் மணியாய் இக்கணம் ஒலிக்கும்!

குயிலின் புரியா மெல்லிசை கவரும்;
தேனீ முனகும் இன்னிசை மயக்கும்;
பெருங்குடி பிறந்து சீரொடு வளர்ந்து
பண்பொடு நாணும் புதுமணப் பெண்ணின்
உள்ளம் தனிலும் உளைச்சல் பெருகும்!

மலர்ந்த மாங்கிளை மெல்லச் சீண்டி
குயிலின் கூவல் பல்திசை பரப்பி
பனித்துளி இலாது மூலிகை தோய்ந்து
மெல்லென வீசும் தென்றற் காற்று
எல்லோர் இதயம் இழுத்துப் பிணிக்கும்!

அழகு மங்கையர் களித்துச் சிரித்தென
மல்லிகை மலர்கள் நிறைந்து விரிந்து
உள்ளம் மயக்கும் களிப்பு வனங்கள் !
துறவியர் உளமே மயங்கும் என்னில்
ஆசை வெள்ளம் அலைத்துக் குழம்பும்
இளமை உள்ளம் ஒருநிலைப் படுமோ?

பொன்மணி மேகலை சிற்றிடைத் தழுவ
மூத்து மாலை நெஞ்சில் தவழக்
காதல் தெருப்பில் எளிதில் இளகும்
மெல்லிய மகளிர் வசந்த காலம்
தேனீ குயிலின் இன்னிசை முழங்க
ஆடவர் உள்ளம் கொள்ளை கொள்வர் !

மலர்மரம் செழித்து அணிசெயும் குன்றுகள்:
மலர்கள் பரந்த உச்சிப் பாறைகள்;
மகிழ்ந்து கூவும் குயிலின் குரல்கள்
நிறைந்து ஒலிக்கும் பள்ளத் தாக்கு;
காணும் மக்கள் களித்துச் சிலிர்ப்பர் !

அன்புள மனைவி அவளைப் பிரிந்து
துன்புறும் பயணி செல்லும் வழியில்
முற்றும் மலர்ந்த மாமரம் கண்டு
கண்கள் மூடிக் கண்ணீர் சிந்தி
மூக்கினை மூடி உரக்க அழுவான் !

மதுவின் வெறியொடு தேனீ முனகல்;
குயிலின் இன்னிசை; மாவின் மலர்கள்,
சண்பக மரத்தின் பொன்மலர் மாலை;
இத்துணை கூரிய கணையுடன் வசந்தம்
பெருங்குடிப் பெண்டிர் நெஞ்சம் குலைக்கும்
காதல் நெருப்பு கிளர்ந்து எரியும்!

மாம்பூக் கொத்து தேர்ந்த கணையாய்,
மலர்க்கிளை வளைவு சிறந்த வில்லாய்,
தேனீ வரிசை வில்லின் நாணாய்,
நிலவே அரச வெண்ணிறக் குடையாய்,
குயில்கள் கவியாய், உலகை வெல்ல
மூலிகைத் தென்றல் யானை மேல்வரும்
அனங்கன் மாறன், வசந்தன் துணையொடு
அனைத்து இன்பம் உனக்கு அருள்க!

# மேகத் தூது

கடமை தவறிய யக்ஷன் ஒருவன்,
காதல் மனையாள் பிரிவின் துயரொடு
ஆண்டு ஒன்று தனியே கழிக்க
ஆண்டான் முனிந்து நாடு கடத்த,
தனதொளி குன்றி இராமக் குன்றில்
ஜனகன் மகளால் புனிதம் அடைந்த,
நீரொடு நிழல்மரம் எங்கும் நிறைந்த
துறவுக் குடியில் வாழ்ந்து வந்தான்!

மனைவியைப் பிரிந்து துணையெதும் இன்றி—
பொன்வளை கழன்று நழுவி வீழ
மெலிந்த முன்கை வறிதே தோன்ற—
சிற்சில திங்கள் குன்றில் கழித்துக்
காதல் உணர்வு மிகுந்த யக்ஷன்
ஆடித் திங்கள் மங்கள நாளில்
களிதுளும் களிறென வியத்தகு வடிவில்
குன்றின் முடியைத் தழுவிய மேகம்
குனிந்து தாழ்ந்து ஆற்றங் கரைகள்
முட்டி மோதும் காட்சி கண்டான்

கேதகி மலரத் தூண்டும் கருமுகில்
தானது கண்ட குபேரன் பணியாள்
முகிழ்க்கும் கண்ணீர் முயன்று தடுத்து
சூழ்கும் எண்ணம் முற்றும் ஆழ்ந்தான்
மகிழும் உளமது மழைமுகில் தோன்றின்
அமைதி இழந்து அலைபடும் எனிலே
தலைவன் தன்னைத் தழுவத் துடிப்பவள்
தொலைவெனில தலைவன் உளநிலை என்னே

மழைநாட் பருவம் நெருங்கக் கண்டு
மனையாள் உயிரது காக்கும் விருப்பாடு
தன்நிலை நலமெனும் நல்ல செய்தி
மன்னுயிர் முகில்வழி அனுப்பிட எண்ணி
அன்பொடு மொழிகள் பற்பல கூறிக்
காட்டு மல்லியின் புதுமலர் தூவிக்
கைகள் கூப்பி முகிலின் வரவு
களிப்பொடு யக்ஷன் ஏற்று நின்றான்

கூர்ந்த புலனொடு நுண்ணிய மதியுள
உயிர்கள் எடுத்துச் சொல்லும் செய்திகள்
ஒளியொடு பனிப்புகை நீரொடு காற்றும்
கலந்த முகிலோ கொண்டு செல்லும் ?
இதனைச் சற்றும் எண்ணா நிலையில்
யக்ஷன் முகிலினை வேண்டி நின்றான்
காதல் நோயில் வாடும் மாந்தர்
உணர்வு உளது இலது இரண்டும்
ஒன்றாய் மயங்கிக் குழம்புவ துண்மை !

சுழற்பெருகு வெள்ள முகிற்குடிப் பிறந்து
விருப்புறு வடிவம் எடுக்கும் நீயே
இந்திரன் அமைச்செனை நானும் அறிவேன்
குபேரன் ஆணை நாடு கடத்த
உறவும் மனைவியும் பிரிந்து வாழினும்
தீயரை வேண்டிக் கிட்டும் விருப்பினும்
தூயரை வேண்டியும் கிட்டா விருப்பம்
நன்றெனை எண்ணி நானுனை வேண்டுவன்

வாடிக் கருகும் மனிதர்க் கெல்லாம்
வான்மழை வழங்கும் நீயென் புகலிடம்!
செல்வத் தலைவன் குபேரன் சினத்தால்
இல்லாள் பிரிந்தவென் சொல்மொழி ஏற்க!
சிவன்முடி ஏறிய நிலவொளி நனைக்கும்
சுற்று வனமதில் மாளிகை நிறைந்த
யக்ஷ மன்னன் குபேரன் வாழும்
அளகா நகரம் அங்கு செல்க!

தொலைவில் வேற்றூர் சென்றோர் துணைவியர்
அலையும் கூந்தல் பின்னே ஒதுக்கி
காற்றின் போக்கில் உயரச் செல்லும்
நின்னை விருப்பொடு நிமிர்ந்து நோக்கியுன்
வருகை கண்டு பிரிந்த கணவர்
விரைந்து மீண்டும் வருவர் என்றே—
தமக்குத் தாமே ஆறுதல் அடைவர்
என்போல் வேற்று விதியிலார் யாரே
தனிமைத் துயருறும் மனைவியைச் சேரார்?

அலைந்து செல்வழி நட்புக் காற்று
முகிலே உன்னை முட்டித் தள்ளும்
வானில் உனது வருகை கண்டு
இணையும் காலம் வந்தது என்று
உணர்ந்து கொக்குப் பெடைகள் மகிழும்
உன்னிடப் புறத்தே சாதகப் புட்கள்
இன்னிசை பாடி உன்வழி தொடரும்

தடையெதும் இன்றி அந்நகர் சென்று
கற்புள மங்கை உந்தன் அண்ணி
நாட்கள் எண்ணும் செயலில் ஆழ்ந்து
உயிருடன் இன்னும் வாழக் காண்க!
நன்மை வருமென நம்பும் நினைவே
பிரிவின் துயரச் சுமையில் சோர்ந்த
மென்மலர் அன்ன மகளிர் மனங்கள்
விழாது பற்றிக் காக்கும் மென்நூல்!

மண்மகள் அரசி கொற்றக் குடையாய்
வெண்மைக் காளான் விரியச் செய்யும்
தாமரைத் தண்டுகள் ஒடித்து எடுத்து
மானஸ ஏரி செல்லும் வழியில்
செவிக்கு இனியவுன் இடியொலி கேட்டு
உன்னொடு கைலை மலையின் முடிவரை
விண்ணில் துணைவரும் அரச அன்னம்!

மலையின் சாரல் மேகலை அணியொடும்,
உலகோர் புகழும் ரகுகுல ராமன்
காலடிப் புனித முத்திரை பதிந்தும்
காலந் தோறும் பிரிந்தனைச் சேரும்
உந்தன் அன்புத் தோழி நெடுமலை
தழுவிப் பிரிந்துநீ செல்லும் வேளை
நெடிய பிரிவினை நினைத்துப் பிறந்த
அனற்பெரு மூச்சால் அன்பினைக் காட்டும் !

களைத்திடில் மலையில் காலினை ஊன்றவும்
தவித்திடில் ஓடைத் தெளிநீர் அருந்தவும்
நீசெல ஏற்ற பயணப் பாதை
நான்சொலச் சற்றே கேட்பா யாக !
மழைதரு முகிலே ! மற்றென் செய்திகள்
சிலபின் செவியில் விருப்பொடு ஏற்க !

உயர நோக்கும் சித்தர் மங்கையர்
உன்பெரு வேகச் சக்தி கண்டு
'காற்று தூக்கிச் செலுமோ மலைமுடி ?'
என்று பயந்து நடுங்கி அலற;
செல்வழி செருக்குடன் காவல் செய்யும்
எண்திசைக் களிறுகள் துதிக்கை வீச்சின்
எல்லைப் பகுதிகள் தவிர்த்து நீங்கி
இன்னீர்ப் பனைமரக் காட்டின் மேலே
விண்ணில் உயர்ந்து வடக்கே செல்க !

நவமணி ஒளிகள் ஒன்றாய்க் கலந்தென
இந்திரன் வில்லின் துணுக்கு ஒன்று
குன்றின் முடியில் கிழக்கே மின்னும்
உந்தன் நீலக் கரிய உடலோ
இடையன் வடிவத் திருமால் உடலென
மயிலின் தோகை அழகுடன் ஒளிரும் !

புருவ நாடகம் அறியா மகளிர்
அறுவடைப் பயனுனைப் பொறுத்த தறிந்து
களிப்பொடு நீர்விழி உன்னை அருந்த
உழவுப் புதுமண் நறுமணம் நிறைந்த
மேட்டுச் சமவெளி நிலத்தில் ஏறுவர்
மேற்கே சற்றே விலகி நீயும்
வடக்கு நோக்கி விரைந்து செல்க !

கருமழை முகிலே, பயணக் களைப்பொடு
நெருங்கும் உன்னை நல்வர வேற்றுச்
சிறந்த மலையாம் சித்திரக் கூடம்
சிரத்தில் ஏற்று உயரத் தாங்கும்
கூரிய மழையைப் பொழிந்து நீயும்
கொடிய கோடை நெருப்பு தணிப்பாய்
உயர்ந்தோர் உளத்து உண்மை உணர்வுகள்
மறந்தும் காலம் தாழ்த்தல் இன்றி
அன்பின் பயனாய் அன்பே அளிக்கும்

கொட்டும் கூரிய மழையின் பொழிவால்
காட்டு நெருப்பு முற்றும் தணிந்து
அமர கூடம் முடிமேல் நன்றியில்
பயணம் களைத்த உன்னைத் தாங்கும்
முன்னர் செய்த நன்மை நினைக்கும்,
கீழோர் தாமும் தம்மை நாடும்
தோழர் கண்டு விலகார் என்னில்
மேலோர் தன்மை மேலும் சொலவோ ?

காட்டு மாங்கனி ஒளிரும் சரிவொடும்
கருங்குழல் சுருளென முடியில் உன்னொடும்
கருத்த நீல வண்ண மையம்
வெளுத்த பொன்னிற வளைவுகள் சூழ்ந்து
மண்மகள் முலையென விளங்கும் அம்மலை
விண்ணகக் காதலர் மயங்கத் தோன்றும் !

காடர் மணமகள் ஆடும் பூங்கொடிப்
பந்தல் மலையில் சற்றே தங்கி
நீரினைப் பொழிந்து சுமையும் குறைந்து
விரைந்து தொலைவுப் பாதை கடந்து
விந்திய மலையின் பாறை அடித்தளம்
களிற்றின் உடலை அழகு செய்யும்,
தீற்றிய நீறெனப் பிரிந்து பரந்து
ஓடும் ரேவா நதியினைக் காண்க !

பின்னர் நீரினை முற்றும் இழந்து,
சிவந்த வண்ண ஆப்பிள் கனிதரும்
உயர்ந்த மரங்கள் வேகம் தணித்த—
காட்டுக் களிற்று மதநீர் நாறும்
ரேவா நதியின் நீரினை இழுத்து
வல்லமை பெற்று மழைதரு முகிலே,
நீசெலும் பயணம் மேலும் தொடர்க!
முழுமை வலிது; வெறுமை மெலிது
காற்றுனை மெலிது ஆக்குவ தில்லை!

குட்டை யோரம் காந்தள் மொட்டும்,
எட்டிப் பார்க்கும் தாதுத் தண்டுடன்
பசும்பொன் வண்ண மலரும் கண்டு
நெருப்பில் கருகிய காட்டு மண்ணின்
செறிந்த நறுமணந் தனையும் நுகர்ந்து
மழைத்துளி உதிர்த்துச் செல்லும் உனது
வழித்தடம் தன்னை மான்கள் வரையும்!

வீழும் மழைத்துளி விழுங்கும் சாதகப்
புள்ளின் திறனை வழியில் கண்டு,
விண்ணில் பறக்கும் நாரைக் கூட்டம்
விரலை நீட்டி எண்ணும் சித்தர்
பேரிடி முழக்கம் தன்னைக் கேட்டு
அன்பு மனைவியர் அலறி நடுங்கி
தம்மை விரைந்து தழுவக் கண்டு
உனக்கு நன்றி வணக்கஞ் செய்வர்!

நண்பா நீயென் மகிழ்ச்சி கூட்ட
விரைந்த செல்ல விரும்பினும் கூட
காட்டு மல்லி நறுமணம் சூழ்ந்த
மலைமுடி பலவும் அலைந்து செல்லும்
காலச் சுணக்கமென் சிந்தை சூழும்
மயில்கள் களிப்பொடு விழியில் நீருடன்
வரவுனை யேற்று வாழ்த்திக் கூவினும்
விரைந்து மேற்செல வேண்டு கின்றேன்

உனது வரவால் தசபுரம் அழகுறும்
கேதகிக் கூர்முனை மொட்டுகள் விரிந்து
காட்டுப் புறங்கள் பொன்னொளி மிளிரும்
கிராமச் சதுக்கப் புனித மரங்களில்
கூடுகள் கட்டப் புட்கள் கூடும்
சிவந்த வண்ண ஆப்பிள் காடும்
கருத்த நீலக் காய்கள் எல்லாம்
கனியும் காலம் இருளாய் இருக்கும்
காட்டு வாத்துகள் சிலநாள் தங்கும்

எங்கும் புகழுறும் அரச நகரம்
விதிசா சென்று சேர்ந்த பின்னர்
நெறித்த புருவச் சிற்றலைக் குமிழொடும்
உரத்த ஒலியொடும் கரைதொட் டோடும்
வேத்ரா வதியின் இனிய நீரினைக்
காதலி இதழெனச் சுவைத்துத் தூய
காதல் விருப்பம் நிறைவு பெறுக!

ஓய்வினை வேண்டி உன்னடி தொட்டதும்
கதம்ப மலர்கள் வெடித்துச் சிரிக்க
நீகாய்க் குன்று களித்துச் சிலிர்க்கும் !
நகர இளைஞர் நடன மகளிர்
காதல் களியில் தடையெது மின்றி
ஆசை உணர்வொடு ஆடிக் களித்தல்
உரத்த ஒலியொடு நறுமணம் வீசிக்
குகையின் மூலம் குன்று முழக்கும் !

காட்டில் அரும்பும் முல்லைக் கொத்தில்
ஓடை அருவி புதுமழை தூவி,
கன்னம் வழியும் வியர்வை துடைக்கும்,
ஒவ்வொரு முறையும் காயம் கண்டு
வாடும் தாமரை செவியில் தொங்கும்
மலர்கள் பறிக்கும் மகளிர் முகத்தில்
உன்னிழல் பரிசாய்க் கொடுத்துத் தொட்டு
விரைந்த சேர்க்கை தன்னில் மகிழ்ந்து
ஓய்வினை முடித்து மேலே செல்க !

உன்வழி வடக்கே அளகா நோக்கினும்
உஜ்ஜெயின் செல்வழி அதுவல எனினும்
அந்நகர் மாளிகைத் தளங்கள் செலாது
விலகி அகன்று சென்று விடாதே !
மின்னற் கிளைகள் ஒளியின் வீச்சில்
மிரளும் விழியுடன் அலறி ஓடும்
அழகிய மகளிர் தம்மொடு இராது
செல்லின் உந்தன் வாழ்க்கை வீணே !

உந்தன் வழியில் நிர்விந்த் யாநதி
ஒலிமணி கோர்த்த மேகலை அன்ன
நீரலை சூழ்கும் நீர்ப்புள் அணியொடு
கன்னியர் காதல் முதற்சொற் குறிப்பென
நீர்ச்சுழித் தொப்பூழ் தெரியக் காட்டும்
நெளிந்து வளைந்த எழில்நடை கண்டு
நெஞ்சில் காதல் நறுமணம் நிரப்பு !

அந்நதி கடந்து தொடர்ந்து சென்று
உந்தன் பிரிவால் வருத்தம் தோன்ற
நீரெலாம் வற்றி மெல்லிய கீற்றாய்
கரையின் மரங்கள் உதிர்த்த சருகொடு
வெளுத்து ஓடும் சிந்து நதியின்
ஆழ்ந்த துயரம் அகலத் துரத்தல்
காதலன் உன்னுளம் களிக்கும் பணியே !

உதயணன் கதையினை ஆழ்ந்து அறிந்த
கிராம முதியோர் வாழும் அவந்தியில்
முன்னர் சொன்ன அந்நல் நகரம்—
நன்னெறிப் பயனாய் விண்ணக மாந்தர்
கொண்ட பேறுகள் கொஞ்சம் கொண்டு
விண்ணக நகரின் சின்னப் பகுதி
மண்ணகம் நோக்கிக் கீழே வந்தென
விண்ணொளி மிளிரும் உஜ்ஜெயின் செல்க !

உஜ்ஜெயின் நகரில் விடியற் காலம்,
காதல் உணர்வில் சாரைக் கொக்குகள்
இதயம் துளைக்கும் குரல்கள் ஒலிக்கும்
ஸிப்ரா நதியின் தென்றற் காற்று
தாமரை நறுமணம் தோய்ந்து குளிர்ந்து,
அனங்கன் கலையினை ஆடிக் களைத்து
அங்கம் சோர்ந்த மங்கையர்க் கிதமாய்க்
காதல் கலையில் கடிதே தேர்ந்த
காதலன் போலக் களைப்பு நீக்கும்

மங்கையர் கூந்தல் மணக்கச் செய்யும்
நறுமணக் கட்டிகள் எரிக்கும் புகையே
வேய்ந்த தட்டித் திரையின் இடுக்கில்
புகுந்து வந்து உன்னெழில் பெருக்கும்!
மாளிகை மயில்கள் தோழமை அன்பொடு
அளிக்கும் பரிசாய் ஆடும் நடனம்!
அழகிய மகளிர் செம்மை வண்ணக்
காலடி தோய்ந்த மலர்மண மாளிகை!
ஆங்கே களைப்பில் இரவினைக் கழித்து
சிவனது புனிதக் கோவில் செல்க!
இறைவன் கழுத்துக் கரிய நீலம்
நிறமாய் உனக்கும் இருக்கக் கண்டு
சிவனது கணங்கள் வியந்து நோக்கும்!
நீலத் தாமரை தாதின் மணமும்
நீரில் ஆடும் கன்னியர் உடலின்
நறுமண எண்ணெய் மிதக்கும் மணமும்
தாங்கும் காந்தா வதியின் காற்று
பூங்கா எங்கும் புகுந்து அலையும்!

ஒருக்கால் கதிரோன் மறையும் முன்னர்
நீ,மஹா காலா செல்ல நேரின்
கதிரோன் மறையக் காத்து இருக்க !
சூலக் கடவுள் மாலைப் பூசனை
ஆலய முரசம் அறையும் சேவை
ஒலிக்கும் இடியெனக் களிப்பாய் மழைமுகில் !

அளந்து நடக்கும் ஒவ்வொரு அடிக்கும்
அசைந்து மணியிழை மேகலை ஒலிக்க
மின்னும் நவமணிக் கற்கள் பதித்த
பூணுடை விசிறி எழிலொடு அசைத்துக்
கைசோர் கோவில் நடன மகளிர்
மழைமுகில் நீதரும் முதல்மழைத் துளிதனைக்
காதலன் நகக்குறி களித்தெனச் சுவைத்துத்
தேனீக் கூட்டம் அணிவகுத் தன்ன
கடைவிழிப் பார்வை உன்மேல் பொழியும் !

சீன ரோஜா மலரெனச் சிவந்த
வான மாலை ஒளிநீ குளித்து,
சிவனின் நடனம் துவங்கும் வேளை
உயர்ந்த கையவன் உடல்நீ சூழ்ந்து
குருதி தோய்ந்த களிற்றுத் தோலை
இறைவன் அணியா வண்ணம் செய்யும்
உந்தன் பக்தி நோக்கும் சக்தி
தன்பயம் நீங்கிக் காணும் சாந்தி !

கன்னியர் இரவில் இருண்ட வழியில்
காதலர் இருப்பிடம் நோக்கிச் செல்வர்
கண்ணை மறைக்கும் அடர்ந்த இருளில்
சின்ன ஊசித் துளையினை இட்டு
பொன்னின் கதிர்கள் என்ன மிளிரும்
மின்னல் ஒளியால் வழியினைக் காட்டு
எளிதில் மிரளும் இயல்பினர் எனவே
இடிக்கும் ஒலியால் கொட்டும் மழையால்
அவரைச் சற்றும் மிரட்ட வேண்டா !

கோபுரம் அமைந்த மாளிகை ஒன்றின்
மணிப்புறா உறங்கும் மேற்பெரும் தளத்தில்
மீண்டும் மீண்டும் ஆடிக் களைத்த
மின்னல் தன்னொடு இரவினைக் கழிக்க !
கதிரோன் எழுந்த அந்தக் கணமே
தொடர்ந்து பயணம் துவங்கப் பணிவேன்
நண்பர்க் குதவி செய்ய நினைப்போர்
உண்மையில் உதவிடத் தாமதம் செய்யார் !

இரவில் பிறமகள் உறவுகொள் கணவர்
விடியற் காலை வீடு வந்தே
துயரம் தோய்ந்த துணைவியர் தம்மை
துரோகம் விளைத்த கண்ணீர் துடைத்து
ஆறுதல் மொழிபல கூறித் தேற்றுவர்
விடியற் காலம் தாமரை மலரின்
பனித்துளிக் கண்ணீர் துடைக்க விரையும்
கதிரோன் ஒளிக்கரம் தடுத்துக் குறுக்கிடில்
அவனது கோபம் கொஞ்சமோ இருக்கும் ?
எனவே அவன்வழி விட்டே விலகு !

எழிலே இயல்பாம் உனது நிழலுரு
அமைதி உறையும் தடாகம் போலும்
கம்பிரா நதியின் தெண்ணீர்ப் புகுந்து
துள்ளிக் குதித்து மேலே மின்னும்
அல்லி மலரென ஒளிரும் வெண்மீன்
உன்வர வேற்கும் அந்நதிக் கண்கள் !
செருக்கொடு அவற்றை ஒதுக்கி விடாதே !

பெண்ணிடை அன்ன பொன்மலைச் சரிவில்
நழுவிக் கீழே வீழும் துணியென
நதியின் கனத்த நீலத் தண்ணீர் !
அத்துணி மெல்லப் பற்றும் கையென
நடுவில் நிற்கும் நாணற் புற்கள் !
மெல்லக் குனிந்து அந்நீர் பருகிப்
பிரிந்து செல்வது எளிதோ தோழா ?
உடைகள் அவிழ்ந்து இடைகீழ் தெரியும்
பெண்ணின் உடலின் இனிமை சுவைத்துப்
பின்னர்ப் பிரிந்து செல்வார் யாரே ?

புதுமழை தந்த மண்ணின் மணமொடு,
காட்டு அத்தி மரத்தின் கனிகள்
கனியச் செய்யும் குளிர்ந்த காற்று !
நீர்க்குழல் துதிக்கை தம்மால் களிறுகள்
விருப்பொடு உயிர்க்கும் அந்தக் காற்று
நீசெலும் குன்றினை இட்டுச் செல்லும் !

இந்திரன் குடிகள் காத்து அருள
பிறைநில வணிந்த இறைவன் அவனே
தெய்வத் தீயின் நாவில் வைத்த—
ஞாயிறும் மிஞ்ச எரிக்கும் சக்தி—
கந்தன் வாழும் அந்தக் குன்று !
மலர்முகில் நீயென மாற்றம் கொண்டு
விண்ணின் கங்கை தண்ணீர் நனைந்த
மென்மலர் அவன்மேல் தூவிச் செல்க !

பெருமலை எதிரொலி பெருக்கும் இடியொடு,
தீயில் பிறந்த தேவன் ஏறும்—
இறைவன் பிறைநிலா ஒளியில் விழியொளிர்—
அணிமயில் நடனம் ஆடத் தூண்டு !
சேய்மேல் பாசம் கொண்ட பவானி
செவியில் தாமரை மலரிதழ் மாற்றாய்
ஒளிரும் வட்டம் மிளிரும் தோகை
உதிர்த்து வீழும் இறகினை அணிவாள் !

நாணற் புதரில் தோன்றிய குமரனை
நன்கு வணங்கிச் சற்றே கடந்து
யாழினைச் சுமக்கும் சித்தர் தம்பதி
மழைத்துளி அஞ்சி உன்வழி விலக
சுரபியின் மகளிர் தியாகம் சுரந்து
நதியாய் மண்ணில் பாயச் செய்த
ரந்தி தேவா புகழினைப் பாடச்
சற்றே கீழே தாழ்ந்து செல்க !

தண்ணீர் பருகநீ தாழும் பொழுது
மாட்டுக் கொம்பு வில்லினை ஏந்தும்
தேவன் வண்ணம் திருடிக் கொண்டு,
நீலக் கல்லினை நடுவே பதித்த
முத்து மாலை ஒற்றை வடமே
நிலமகள் அணிந்தென ஒற்றைக் கீற்றாய்
அகன்ற அந்நதி தொலைவில் தெரிய
விண்ணில் திரிவோர் வியந்து காண்பர்!

வெண்ணிற மல்லிகை தன்னைச் சுற்றும்
வண்டின் எழிலை மிகவும் மிஞ்சத்
துள்ளிக் குதிக்கும் மானின் விழியின்
எழிலொடு ஒளிர்ந்து உயர்த்திய இமையுடன்
நெளிந்த புருவ நளின அசைவு
நடனம் தேர்ந்த தசபுர மகளிர்
ஆர்வ விழிக்கு இலக்காய் நீயும்
அந்நதி கடந்து மேலே செல்க!

புனித பூமியில் உன்நிழல் அலையக்,
காண்டிப வில்லினை ஏந்திய அர்ச்சுனன்
கமல மலர்மேல் பொழியும் மழையென,
நூற்றுக் கணக்கில் மன்னர் முகங்களில்
கூர்அம் பெய்த கொடிய போர்க்களக்
குருகுல பூமியைக் கண்டு செல்க!

உற்றார் பற்றால் போரின் நீங்கிய,
கலப்பை ஆயுதம் ஏந்தும் பலராம்
இரேவதி விழிகள் தெரியக் காட்டும்
சிறந்த மதுவும் வெறுத்துத் துறந்து
சரஸ்வதி நதிநீர் வணங்கித் தொழுதான்
அந்நீர் அருந்தி நீவிரும் கூட
உருவில் மட்டும் கருமை இருக்க
உள்ளத் தூய்மை அடைவீர் ஐயா !

சகரர் மக்கள் விண்ணகம் சேர
ஏணி அமைத்த இமயச் சரிவில்
ஜானுவின் பெண்மகள் கங்கை இறங்கும்
குன்றின் அருகே சென்று காண்க !
சிவனது முடியைப் பற்றிய கங்கை
இறைவன் முடிமணிப் பிறைநில வதனை
அலைக்கை கொண்டு அணைத்துக் கொண்டு
கௌரியின் முகத்தில் வெறுப்பினைக் கண்டு
நுரைத்துச் சிரித்து எள்ளல் செய்வாள் !

விண்ணிலுன் பின்புறம் பற்றத் தொங்கி
விண்ணகக் களிறு ஒன்றினைப் போன்று
படிகத் தூய கங்கை நீரினைப்
பணிந்து நீயும் பருக முயன்றால்
உன்னிழல் அவளது ஓட்டம் தழுவிட
தன்னொடு யமுனை கலந்து ஓடும்
அழகொடு அங்குக் கங்கை காண்பாள் !

அந்நதி சுரந்து பொங்கிப் பெருகும்,
கஸ்தூரி மானால் பாறை மணமுறும்
வெண்பனி இமய முகட்டின் மேல்நீ
நீண்ட களைப்பு நீங்க நின்றால்
முக்கண் இறைவன் வெண்ணிறக் காளை
சேற்றினைப் பெயர்த்த கொம்பில் கறையெனத்
தோற்றம் அழகுற நீயும் பெறுவாய்!

காற்றில் தேவ தாருக் கிளைகள்
உரசப் பிறந்த காட்டு நெருப்பு
மலையினைத் தாக்கி, நெருப்புப் பொறிகள்
மலைக்காட் டெருமை வாலினைத் தீய்த்தால்
மழையின் கூரிய ஆயிரம் தாரை
பொழிந்து அத்தீ அழிக்க வேண்டும்
எளியோர் துன்பம் நீக்கி அருளல்
பெரியோர் செல்வப் பெரும்பய னாகும்!

எறியும் இடியினைச் சிறிதும் பொறாத
சிறுமலைச் சரபம் செருக்கு மிகுந்து
எட்டாத் தொலைவில் இருக்கும் உன்மேல்
சட்டெனச் சினந்து தாவிப் பாய்ந்து
தமது அங்கம் தமையே முறிக்கும்
உனது வெற்றிக் களிப்புச் சிரிப்பால்
அன்னவை வெருண்டு அலறத் துரத்து
வெற்றுப் பெருமை வீண்செயல் இறங்கும்
எவரே பெரிதும் எள்ளல் பெறாரே?

சித்தர் என்றும் தொழுது ஏத்தும்—
கண்ணால் பாவம் நீத்து காணில்
இறைவன் திருவிடம் உடலொடு சேர்க்கும்
பிறைநில வணிந்த இறைவன் திருவடி
பொதிந்த பாறை சுற்றி வந்து
தொழுது ஏத்தக் கீழே தாழ்க!

வீசும் காற்று வெற்று மூங்கிலின்
இடையே புகுந்து இன்னிசை பொழியும்;
வனத்தின் தேவதை உணர்ச்சிக் குரலில்
முப்புரம் எரித்த வெற்றி பாடும்
பள்ளத் தாக்கில் உன்னிடி முரசென
மூழங்கிடில் இறைவன் தாண்டவ இசைக்குழு
முழுமை நிறைவு கொண்டிசைக் காதோ?

இமயச் சாரல் விந்தைகள் கண்டு
அவையும் கடந்து வடக்குத் திக்கில்
காட்டு வாத்து கடக்கும் வழியாம்,
பரசு ராமன் புகழ்சொல் வழியில்
மகாபலி மன்னன் செருக்கினை அடக்கத்
திருமால் நீட்டிய நீல அடியெனக்
குறுக்கே நீண்டு அழகுற விளங்கும்
குறுகிய கிரௌஞ்சக் கணவாய் அடைக!

இன்னும் மேலே உயரச் செல்க!
முக்கண் இறைவன் முழக்கச் சிரிப்பினைக்
காலம் தோறும் சேர்த்துக் குவித்தென
வெண்ணிறக் குமுத மலரென ஒளிரும்
உயர்முடிக் கோபுரம் வானில் எழுந்த
தசமுக ராவணன் வலிய கையால்
மூட்டுகள் மூட்டு முறிந்து போன
தேவியர் உருக்காண் ஆடி போலும்
கைலா யத்தின் விருந்தின னாகுக!

புதுவெண் தந்தம் போன்ற சரிவில்
குழைத்து அரைத்த கண்மை அன்ன
கருநிற முகில்நீ சாய்ந்து தொங்க,
கரிய கலப்பை தோளில் ஏந்திய
பலராம் போன்று தோன்றும் குன்று
பார்வை மயக்கும் எழிலொடு நிற்கும்!

நாக வளைகள் இல்லாச் சிவன்கை
தன்கை கோர்த்து ஆடிடக் கௌரி
ஆடலுக் கேற்ற அம்மலை உலவி
அணிமிகு சரிவில் ஏறுங் காலை
உன்னுள் நீரினை இறுகச் செய்து
அலைபோல் படியென அவள்முன் செல்க!

இந்திரன் மின்னல் கூரிய பொறிகள்
உன்னைக் குத்தப் பீச்சும் நீரில்
தேவ மகளிர் குளியல் செய்வர்;
கோடைச் சூட்டில் உன்னைக் கண்ட
ஆடல் விரும்பும் பெண்கள் நண்பா,
உன்னைச் செல்ல விடவே மாட்டார்
கடிது முழங்கும் இடியின் ஒலியால்
அவரை நீயும் அஞ்சச் செய்க!

தங்கத் தாமரை மலர்கள் வளரும்
மானஸ ஏரியின் நீரினைப் பருகு!
உந்தன் திரைநிழல் தந்திடும் சுகமே!
அயிரா வதத்திற் களித்து மகிழ்க!
விண்ணில் கற்பக மரமது அணிந்த
இளந்தளிர் இலையாம் மென்பட் டுடையினை
மழைத்துளி தோய்ந்த காற்றில் அசைக்க!
ஒளியும் நிழலும் பின்னிப் பிணைந்து
நவமணி மின்னும் சரிவொடு தோன்றும்
மேதகு மலையில் களித்து மகிழ்க!

கங்கை மென்துகில் சரிந்து வீழக்
காதலன் மடியில் அமர்ந்த பெண்ணென
மலையின் உயர்ந்த சரிவில் நிற்கும்
அளகா அறிதல் அரிது முகிலே!
முத்து வலையில் சேர்த்துப் பிணித்துக்
கூந்தல் கொண்டை முடித்த தென்ன
அடுக்கு மாட மாளிகை மேலே
மழைமுகில் சூழ்ந்து பொழிந்து நிற்கும்!

முகிலினை முத்தம் செய்யும் முகடுள
மாளிகை உன்னை உயர்வில் நிகர்க்கும்.
நவமணி பதித்த தளங்கள் மெருகு
ஒளிரும் உன்மழைத் துளியினை வெல்லும்.
சுவரில் எழுதிய அழகிய ஓவியம்
வான்வில் வண்ணம் தன்னை வெல்லும்.
அழகிய பெண்ணின் நளின அசைவுகள்
உனது மின்னல் நடனம் வெல்லும்.
இசையொலிக் கேற்ப அறையும் முரசு
அடிக்குரல் அன்ன இடியொலி நிகர்க்கும்.
இவ்விதம் ஒவ்வொரு வகையுனை விஞ்சும்!

மழைமுகில் உந்தன் வரவில் பிறந்த
கதம்ப மலர்கள் கூந்தல் வகிட்டிலும்,
அன்று அலர்ந்த அமராந்த் மலர்கள்
கூந்தல் கற்றை முடிச்சிலும் சூடி
புதுமலர் மல்லிகை கூந்தல் பின்னி
சிரிசா மென்மலர் காதில் இழையக்
கையில் தாமரை ஏந்திய மகளிர்
லோத்ரா மலரின் தாது படிந்த
வெளுத்த பொன்னிற முகத்தொடு மிளிர்வர்!

அடிக்குரல் அன்ன இடியொலி போன்று
மெல்லென அறைந்த முரசுகள் ஒலிக்க,
உயர்குடிப் பிறந்த மகளிர் தம்மொடு
விண்ணக மரத்தில் வடித்து எடுத்த
கிளர்ச்சி யூட்டும் மலர்மது அருந்த
விரவிய மலரென விண்மீன் தெரியும்,
விலைமதிப் பில்லா நவமணி பதித்த
மாளிகை மேல்தளம் நாடுவர் யக்ஷர்

காதல் மகளிர் நள்ளிரா நேரம்
காதலர் தம்மைத் தேடி விரைந்து
தட்டித் தடவி நடந்து சென்ற
வழியினைச் சுட்டிக் காட்டும் குறிகள்
காலைக் கதிரோன் வரவில் தெரியும்.
அசைந்து ஆடும் சுருண்ட கூந்தல்
இழிந்து வீழ்ந்த மந்தார மலர்கள்,
செவியில் அணிந்த பொன்னிறத் தாமரை
மலரின் நீங்கி வீழ்ந்த இதழ்கள்,
தனங்கள் இறுக அணைத்த வலையின்
கயிறு அறுந்து சிதறிய முத்துகள்
தரையில் எங்கும் பரவிக் கிடக்கும்!

காதலர் இடைநாண் தளர்த்தும் பொழுதில்
கைகள் இரண்டும் கிளர்ச்சியில் நடுங்கும்
பட்டு மென்துகில் கழற்றி எறியும்
கோவைக் கனியிதழ் யக்ஷ மகளிர்
நாணொடு குழப்பம் விஞ்சிய நிலையில்
விளக்கென ஒளிதரும் நவமணி தன்னில்
கைநிறை நறுமணப் பொடியினை எறிவர்!
இலக்கைத் தொடினும் பயனில் வீச்சே!

ஓயாக் காற்று வீசி உந்த
உயர்ந்த மாளிகை மேற்தளம் அடைந்த
உன்போல் மழைமுகில் தன்நீர்த் துளியால்
ஓவியம் கறைபடக் கண்டு பயந்து
தேர்ந்த திறனொடு புகையின் வடிவில்
பலகணி ஊடே சிதறி ஓடும்!

அங்குநீ கடந்து செல்லும் பொழுதில்
நூலில் தொங்கும் சந்திரக் கற்கள்
நள்ளிரா நிலாக்கதிர் தம்மேல் பட்டு
குளிர்ந்த தூய துளிகள் சொரிந்து
காதற் கணவர் பலமுறை தழுவிக்
களித்த மகளிர் களைப்பு நீக்கும்.

செல்வத் தலைவன் குபேரன் தோழன்
இறைவன் அங்கே உறைவது அறிந்து
மாறன் மிகுந்த அச்சம் அடைந்து
தேனீ வரிசை நாணாய் வகுத்த
வில்லினை இழுத்தல் விலக்கி நிற்பான்
அழகிய மகளிர் புருவவில் வளைத்து
ஒளிரும் விழிக்கணை மாறன் இலக்கில்
கனிவொடு எய்து பணியினை முடிப்பர்!

அங்கே குபேரன் மாளிகை வடக்கே
வான்வில் எழிலுள வாயில் வளைவொடு
நெடுந்தொலை தெரிய எம்மனை நிற்கும்.
அவள்கை எட்டும் அளவில் மலரொடு
என்தன் மனைவி மகன்போல் பேணிய
மந்தாரச் சிறுமரம் அருகில் வளரும்

மரகதப் பலகைப் படிக்குளம் தன்னில்
முற்றும் மலர்ந்த தாமரை மலர்கள்
ஒளியிழைத் தண்டொடு நிற்கும் நீருள்
அமைதி இழந்த காட்டு வாத்துகள்
ஏக்கம் மறந்து நீந்தி அலையும்.
உந்தன் வரவைக் கண்ட பின்னும்
அருகுள மானஸ ஏரியை நாடி
அவைகள் செல்லப் போவது இல்லை!

பொன்னிற வாழை மரங்கள் சூழ்ந்தும்
அழகிய நீலம் பதித்த முடியொடும்
அருகே சின்ன அற்புதக் குன்று!
மின்னொளி மின்னும் உன்னைக் கண்டு
எந்தன் அன்பு மனையாள் விரும்பும்
அந்தக் குன்று நினைவு வரவே
எனது நெஞ்சம் நடுங்கும் நண்பா!

அங்கே அமராந்த் புதர்கள் சூழ்ந்த
நறுமண மல்லிகைப் பந்தல் அருகே
மிகவும் விரும்பும் கேசரா மரமும்
இளந்தளிர் இலைகள் காற்றில் அசையும்,
செந்நிற அசோக மரமும் நிற்கும்.
அவள்வாய் உமிழும் மதுவுக் கொன்றும்
அழகிய காலடி உதைபட ஒன்றும்
மலரும் காலம் வந்தது போன்று
பாவனை செய்து ஏங்கி நிற்கும்.

இருமரம் இடையே இருக்கை யொன்றில்
புதுமுளை மூங்கில் மெருகினை வெல்லும்,
பொற்றூண் தாங்கும் படிகப் பலகை!
மாலை நேரம் உனது நண்பன்
நீலக் கழுத்து மயிலங்கு நின்று
என்னரும் மனைவி கைகளைத் தட்ட
இன்னொலி வளையலுக் கேற்ப ஆடும்!

இத்தனை அறிகுறி மனதிற் கொண்டும்
இருபுறம் கதவில் எழிலுடன் வரைந்த
தாமரை சங்கு உருவம் கண்டும்
எம்மனை எளிதில் அறிவாய் நண்பா!
எனது பிரிவால் ஐயம் இன்றி
மனையின் மெருகு குறைந்தே இருக்கும்;
கதிரோன் மறைவில் தாமரை தன்னெழில்
முற்றும் இன்றிக் குன்றிக் காணும்!

களிற்றின் கன்றெனச் சிற்றுரு எடுத்து
நீயுடன் விரைந்து கீழே இறங்கி
முன்னர் சொன்ன களிப்புக் குன்றின்
மனங்கவர் முகட்டில் அமர்ந்து கொண்டு
மின்மினி வரியென மின்னல் பார்வை
எம்மனை உள்ளே எளிதே செலுத்து!

வசந்தக் கொடியெனச் செழிக்கும் இளமை
கொவ்வைக் கனியெனச் சிவந்த இதழ்கள்
முல்லை மொட்டென ஒளிரும் பற்கள்
மெலிந்த இடையும் ஆழ்ந்த உந்தியும்
மிரண்ட மானின் மருண்ட விழியும்
மார்பகச் சுமையால் சற்றே குனிந்தும்
இடுப்பின் சுமையால் சோர்ந்தும் நடக்கும்
பிரமன் படைப்பிற் சிறந்த பெண்ணென
அவளை நீயும் அங்கே காண்பாய்!

எங்கோ கணவன் பிரிந்து இருக்கத்
தனியே பேச்சைப் பெரிதும் குறைத்துச்
சக்கர வாகப் புள்ளெனப் புலம்பும்
அவளே இன்னொரு என்னுயிர் அறிக!
இத்தனை நீண்ட நாட்கள் செல்ல
ஆழ்ந்த ஏக்கம் பெரிதும் அலைக்க
உறைபனி தாக்கிய தாமரைக் கொடியென
இளம்பெண் மாறித் தோன்றக் கூடும்!

துயரொடு அழுது கனத்த விழிகள்
சுடும்பெரு மூச்சால் வாடிய இதழ்கள்
உள்ளங் கைதனில் கவிழ்ந்த முகத்தொடு
அவிழ்ந்து வீழ்ந்த கூந்தலி னூடே
அவளைக் காணில் முகில்நீ மறைத்த
வெளுத்த துயர நிலவெனத் தோன்றும்!

இறைவன் துதியில் மூழ்கிய நிலையோ,
பிரிவில் இளைத்த என்னுரு தன்னைக்
கற்பனை செய்து தீட்டும் நிலையோ,
'அன்பே தலைவன் நினைவு உண்டோ?
உன்மேல் அவர்க்குப் பிரியம் அன்றோ?'
என்று கிளியினை வினவும் நிலையோ
அங்கே நீயும் அவளைக் காண்பாய்!

என்பெயர் குறிக்கும் சொற்கள் கொண்ட
இன்னிசை பாடிட விருப்பம் கொண்டு
கலைந்த ஆடை அணிந்த நிலையில்
யாழினை மடியில் வைத்து மீட்டுவள்
கண்ணீர் நனைத்த நரம்பினை மீட்டக்
கைவரக் கூடினும் ஏனோ அடிக்கடி,
தானே இயற்றிய பாடல் எனினும்
தொடரும் அடிகள் தொடர்ந்து மறப்பாள் !

நாங்கள் பிரிந்த நாள்முதற் கொண்டு
வாயிற் படியில் வைத்த மலர்கள்
தரையில் முறையே வரிசைப் படுத்தி
மீதம் இருக்கும் மாதம் கணிப்பாள்
இதயம் காத்த காதல் இன்பம்
அதையும் நினைவில் கொணர்ந்து களிப்பாள்
கணவரைப் பிரிந்து வாடும் மகளிர்
மனதை இத்தகு செயல்கள் மாற்றும்

பகலில் பலசெயல் மூழ்கிய மங்கை
அகலாத் தனிமை துயரம் மறப்பாள்
இரவோ ஏதும் செய்வ தறியாத்
துயரச் சுமையில் செலுமென் றஞ்சுவன்
நள்ளிர வதனில் கற்புள மங்கை
விழிப்பொடு தரையில் வீழ்ந்து கிடக்கும்
பலகணி அருகே சென்று நீயென்
நலமொழி கூறித் தேற்ற வேண்டுவன் !

துயரில் மங்கை மிகவும் இளைத்து
ஒருபுறம் உடலைச் சேர்த்து வளைத்து
அடிவான் தோன்றும் தேய்பிறை நிலவின்
அறுதிப் பிறையெனத் தோற்றம் கொண்டு
தனிமைப் படுக்கை வீழ்ந்து கிடப்பாள்
எனது அருகில் களிப்பின் நிறைவால்
கணங்கள் இறகுடன் பறந்த இரவுகள்
கண்களின் சுடுநீர்ச் சுமையுடன் நகரும் !

இளந்தளிர் மொட்டுப் போன்ற இதழ்கள்
சுடும்பெரு மூச்சால் வாட்டம் காணும்.
அடிக்கடி சடங்குக் குளியல் கண்டு
படிந்திட மறுத்துக் கூந்தல் பறக்கும்.
கன்னம் புரளும் கற்றைச் சுருள்கள்
தன்னை விலக்கும் பெண்ணவள் காண்பாய் !
கனவில் என்னொடு கலந்து கூடும்
காதல் ஆர்வம் உறக்கம் தேடும்
சட்டெனப் பொங்கும் கண்ணீர் வெள்ளம்
கிட்டா இன்பம் இட்டுச் செல்லும் !

பிரிவின் முதல்நாள் மலர்கள் நீக்கி
ஒற்றைச் சடையாய்ப் பின்னிய கூந்தல்
என்பெரும் துயரம் உருகி ஓடச்
சாபம் முடியும் நாளில் பிரிப்பேன்
வலிக்கும் முரட்டுச் சிக்குச் சடையை
வெட்டா நகங்கள் கன்னம் படாது
தொட்டு விலக்கும் தையல் காண்பாய் !

பழைய நாளின் இன்ப நினைவொடு
பலகணி வழியே குளிரமு தூட்டும்
நிலவின் கதிர்கள் நோக்கிய விழிகள்
விலகித் துயரொடு மறுபுறம் திரும்பும்.
கண்ணீர் கோத்த புருவம் தம்மால்
கனத்த இமைகள் விழிகள் மூட
நனவில் நடையோ கனவு நிலையோ
எனவே ஐயுற நகரும் மென்னடை.
முகில்கள் மூடிய பகலில் தாமரை
மலர்தலு மில்லை; குவிதலு மில்லை !

ஆடை அணிமணி அனைத்தும் துறந்து
மென்னுடல் தன்னைத் துடிப்பொடு காத்து
அளவே இல்லாத் தனிமைத் துயரொடு
என்னரும் காதலி மீண்டும் மீண்டும்
வீணே படுக்கை வீழ்ந்திட முயல்வாள்
காணில் உன்விழி கண்ணீர் உகுக்கும்
இளகும் உன்னுளம் பிரிவில் உருகும் !

என்பால் உளத்தில் காதல் நிறைவால்
பிரிவில் இரங்கும் நிலையினைப் பெற்றாள்
நானிது வரையில் சொன்னவை எல்லாம்
வீணே பெருமைப் பிதற்றல் அல்ல.
நீயே விரைவில் கண்ணால் காண்பாய் !

காற்றில் அசைந்து அலைக்கும் கூந்தல்
கண்மை இன்றி ஒளியினை இழந்த
கடைவிழிப் பார்வை கண்ணை மறைக்கும் !
களிமது முற்றும் துறந்த விளைவால்
நளின நடனம் மறந்த புருவம் !
எனக்கோர் உணர்வு: நீவரக் கண்டு
மான்விழி மங்கை இடக்கண் துடித்து,
மீன்கள் ஊடே துள்ளிக் குதிக்க
அசையும் நீலத் தாமரை நிகர்க்கும் !

நெடுநாள் அணிந்த முத்து வலையினை
விதியால் அவளும் அணியா விலக்கும்.
காதல் இன்பக் களிப்பின் முடிவில்
மெதுவே என்கை வருடிக் கொடுக்கும்,
வாழைத் தண்டென வெளுத்த தொடைகள்
இன்றென் நகக்குறி ஏதும் இலாது,
இரண்டும் தாமே நடுங்கத் துவங்கும் !

மழைதரு முகிலே அந்த நேரம்
அவளும் மகிழ்ச்சி காணக் கண்டால்
இரவின் நாழிகை இடியினை நிறுத்தி
அவளது அருகே காத்து நிற்க !
இளந்தளிர் கொடியென எந்தன் கழுத்தை
இறுகிய அணைப்பில் சுற்றிப் பின்னிய
அவளது கைகள் காதலன் என்னைக்
கடிதே முயன்று தேடிப் பெறாது
சட்டெனப் பிடிவிட வீழ விடாதே !

மழைநீர் தெளித்துக் குளிர்ந்த காற்றால்
விழித்து எழுகென அவளை எழுப்பு.
நறுமண மல்லிகை அரும்புக் கொத்தொடு,
கருமுகில் வரவால் எழிலுறு பலகணி
கூர்ந்தவள் நோக்கும் அந்த நேரம்
மின்னல் ஒளிதனை உன்னுள் மறைத்துப்
பணிவொடு மெல்லென அதிரும் குரலில்
மேதகு மங்கை விளிக்கத் துவங்கு!

சுமங்கலிப் பெண்ணே ! என்னை அறிக !
உந்தன் கணவரின் உற்ற தோழன்
மழைமுகில் எனது இதயம் காத்த
அவன்மொழி கூறித் தேற்ற வந்தேன்.
துயருறு மனைவியர் சிக்குறு பின்னல்
பிரிக்க விழைந்து தொலைநா டிருந்து
களைத்துத் திரும்பும் கணவர் துணையிடம்
மேலும் விரைந்திட மென்குரல் தருவேன் !

இப்படி விளிக்கத் தன்முகம் உயர்த்தி
அனுமனை நோக்கிய மைதிலி என்ன
மலருளம் திறந்து ஆர்வ நோக்கொடு
உன்னை அவளும் உற்றுப் பார்ப்பாள்
பணிவொடு உனக்கு வரவு கூறிக்
கவனத் துடனே உன்மொழி கேட்பாள்
கணவர் குறித்த நண்பர் செய்தி
பிரிந்தவர் மீண்டும் சேருதற் கடுத்துப்
பெண்கள் பெரிதும் வேட்பது நண்பா !

நெடுநாள் வாழும் என்னரும் முகிலே!
எந்தன் வேண்டு கோளுக் கிணங்க
உனக்கும் பெருமை சேர்க்கும் வகையில்
இங்ஙனம் அவளிடம் பேசுவா யாக!
'இராமக் குன்றின் குடிலில் அலைந்து
உனது துணைவன் உயிர்வாழ் கின்றான்—
மெல்லிய பெண்ணே! உன்னைப் பிரிந்தவன்
உன் நலம் தன்னை வினவு கின்றான்'
அழிவுக் கிரையாய் ஆனாள் தனக்கு
இத்தகு தேற்றும் முதல்மொழி சொல்க!

சாபம் அவன்வழி தடுக்க அங்கே
மெலிவெனில் மெலிவு; துயரெனில் பெருந்துயர்,
கண்ணீர் மூழ்கின் கண்ணீர் நனைந்து
ஏங்கின் தொலையா ஏக்கம் கொண்டு
சுடும்பெரு மூச்சால் உன்னுடல் வாடின்
நீள்பெரு மூச்சில் அவனுடல் துடிக்க—
உனது உடலும் அவனது உடலும்
ஒன்றிய தென்று அவனுளக் கற்பனை

உன்முகம் தொடவே ஆர்வம் கொண்டு
உண்மையில் உரக்கச் சொல்லத் தக்கன
உன்தோழி அருகில் கிசுகிசு என்றே
உன்செவி ஓத விருப்பம் கொண்டவன்
உன்செவிக் கெட்டாத் தூரம் இன்று
உன்விழி தன்னால் காணவும் படாது
இன்னா ஏக்கம் விளைத்த இம்மொழி
என்வாய் வழியே உனக்குச் சொல்வது!

சியாமா கொடியில் உன்னுடல் கண்டேன்
மருளும் மான்விழி பார்வை கண்டேன்
நிலவில் குளிரொளி முகத்தைக் கண்டேன்
மயிலின் சிறகில் ஒளிரும் கூந்தல்
ஓடை நீரின் சிற்றலை தன்னில்
அழகிய புருவ நெளிவும் கண்டேன்
ஓரிடம் எல்லாம் சேர்ந்து உன்போல்
உருவம் எங்கும் காணேன் ஐயோ !

மழைநீர் தெளித்த சுடுமண் நறுமணம்
உன்வாய் மணமென எழுந்தது அன்பே !
உன்னைப் பிரிந்து தொலைவில் துயரொடு
முன்பே இளைத்த என்னுடல் தன்னை
ஐங்கணை மாறன் மேலும் துளைப்பான்
கோடை முடிவில் மழைமுகில் திரண்டு
கதிரொளி பிரிந்து துணுக்குகள் சிதற
வானம் தன்னை எல்லாத் திக்கும்
விருப்பொடு தழுவும் இந்தக் காலம்
என்நாள் எங்ஙனம் செல்லும் என்று
இரக்கம் கொண்டு எண்ணிப் பார்க்க !

வண்ணக் கட்டியால் பாறை தன்னில்
பொய்ச்சினம் தோன்றும் உன்னுரு தீட்டி
உந்தன் காலடி வீழ்ந்த நிலையில்
என்னுரு வரைய விரும்பும் பொழுது
எந்த நேரமும் வெளிப்படும் கண்ணீர்
உடனே நிறைந்து விழிகள் மங்கும்.
இங்கும் நமது சேர்க்கை சகியா
விதிதான் ஐயோ எத்துணை கொடிது !

பெரிதும் முயன்றுனைக் கனவில் கண்டு
வெற்று வெளியில் என்கை நீட்டி
ஆரத் தழுவி அணைக்க முயல்வேன்
மரம்வாழ் தேவதை என்துயர் கண்டு
பெருமுத் தெனவே வடித்த கண்ணீர்
இளந்தளிர் இலைகள் சேர்ந்தன அன்றோ ?

இமயக் காற்று தேவ தாருவின்
இறுகிய மொட்டுகள் விரைந்து அவிழ்க்கும்.
மரத்தில் வடியும் பாலின் மணத்தொடு
தெற்குத் திக்கின் பாலது வீசும்.
சின்னாள் முன்னே உன்னெழில் அங்கம்
அணைந்தது என்றே நினைந்து விருப்பொடு
அந்நற் காற்றினை நானும் அணைப்பேன் !

எழிலொடு ஒளிரும் விழியுள பெண்ணே !
நீளும் நெடிய இரவு தன்னை
ஒருசிறு கணமாய்ச் சுருக்க வருமோ ?
கொடிய வெப்பக் கோடை நாட்கள்
இளவெயில் சுகமொடு ஒளிரக் கூடுமோ ?
எட்ட இபலா இத்தகு ஆசை
உயிர்க்கும் மூச்சாய் இழுக்குமென் இதயம்
பிரிவெனும் கொடிய நோவின் இரையாய்
உரிய காப்பெதும் இன்றி நின்றது !

என்னைக் குறித்து இன்னும் வேண்டா!
என்னுள வலிமை எல்லாம் சேர்த்து
என்துயர் பொறுத்து இங்கே உள்ளேன்
எழில்மிகு பெண்ணே நீயும் கூட
பெரிதும் சோர்வில் வீழ்ந்து விடாதே!
என்றும் யாரே மகிழ்ச்சி அடைவார்?
அன்றித் துயர்யார் என்றும் பெறுவார்?
உலகில் மாந்தர் வாழும் நிலையோ
மேல்கீழ் மாறும் சக்கர விளிம்பே!

அரவணை இருந்து அரங்கன் எழுந்து
விரைந்தென் சாபம் தீர்க்க வேண்டும்.
இன்னும் எஞ்சிய நான்கு திங்கள்
கண்களை மூடிக் கழித்து விடுக!
இலையுதிர் காலம் நிலவின் ஒளியில்
ஒளிரும் இரவில் இருவர் நாமே,
பிரிவில் விருப்பொடு கற்பனை செய்த
பெருஞ்சுகம் எல்லாம் பெற்றுச் சுவைப்போம்!

இன்னும் இங்ஙனம் அவன்சொலக் கேட்டேன்:
எந்தன் கழுத்தை அணைத்த வண்ணம்
ஒருமுறை படுக்கையில் உறங்கும் வேளை
சட்டென விழித்துச் சற்றே அழுதாய்
மீண்டும் மீண்டும் ஏனெனக் கேட்க
நீயே சிரித்து இங்ஙனம் சொன்னாய்—
கள்ளா நீயும் எந்தன் கனவில்
இன்னொரு பெண்ணொடு ஆடக் கண்டேன்.

நினைவுக் குறிப்பு இதனைக் கொண்டு
நானிவன் நலமென அறிந்து கொள்க!
கருவிழிப் பெண்ணே! காரணம் இன்றி
பிரிவில் காதல் அழிவுறும் என்னும்
அறியார் மொழியால் ஐயுற வேண்டா!
ஐயோ! இல்லை! இன்பம் இன்மை
ஆசை மேலும் அதிகம் தூண்டிக்
காதலின் பெரிய கிடங்கில் குவிக்கும்

இன்பணி இதனை எனக்குச் செய்வாய்
என்பதென் எண்ணம் அன்பு நண்பா!
உன்முகத் தோற்றம் மறுப்புக் குறிப்பென
என்னால் எண்ணக் கூடுவ தில்லை
சாதகப் புட்கள் வேண்டும் நீரினைச்
சத்தம் இன்றி அளிப்பது நீயே!
மேன்மை மிக்கோர் அளிக்கும் மறுமொழி
வேண்டும் செயலை வேண்டிய முடித்தல்!

வினோதம் எனினும் நட்பின் பொருட்டோ
துயருறும் என்பால் இரக்கம் கொண்டோ
என்னுள விருப்பம் இவ்விதம் முடித்து
முகிலே விரும்பும் நிலமெலாம் திரிந்து
மழையின் பெருமை பெரிதும் பெறுக!
ஒருகண மாயினும் மின்னல் தன்னைப்
பிரியா தென்றும் இருப்பா யாக!

∴ ∴ ∴



இந்நூலாசிரியர் மதியழகன் அண்ணா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த சென்னைத் தொழில் நுட்பக் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார். இந்திய இலக்கியங்களிலும் பிறநாட்டு இலக்கியங்களிலும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர், ஆங்கிலத்தில் தாம் படித்துச் சுவைத்த வடமொழிக் கவிதைகளையும், காளிதாசன், தாகூர், அரவிந்தர், கலீல்கிப்ரான் ஆகியோரின் படைப்புகள் சிலவற்றையும் தமிழாக்கம் செய்திருக்கிறார்.